**ஸூ.-(௩௧) இதில் முதற்பதம் ப்ரணவம்.**

(வ்யா.) 'இதில் முதல்பதம் ப்ரணவம்' என்கிறார். (௩௨) "ஓமித்யக்ரே வ்யாஹரேத்" [ஓமித்யக்ரே வ்யாஹரேத்] என்றே ஶ்ருதி சொல்லிற்று ஸ்ம்ருதியும், (௩௩) "ப்ரணவாத்யம் நமோமத்யம் நாராயணபதாந்திமம் । மந்த்ரமஷ்டாக்ஷரம் வித்யாத் ஸர்வஸித்திகரம் ந்ருணாம்" [ப்ரணவாத்யம் நமோமத்யம் நாராயணபதாந்திமம்- மந்த்ரமஷ்டாக்ஷரம் வித்யாத் ஸர்வஸித்திகரம் ந்ருணாம்] என்றதிறே.

இனி, ப்ரணவத்துக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக, இதனுடைய அக்ஷரத்ரயாத்மகத்வத்தை அருளிச்செய்கிறார்.

**ஸூ.-(௩௨) இது 'அ' என்றும் 'உ' என்றும் 'ம' என்றும் மூன்று திருவக்ஷரம்.**

(வ்யா.) 'இது அ என்றும், உ என்றும், ம என்றும் மூன்று[1] திருவக்ஷரம்' என்று இப்ரணவந்தான், அஸம்ஹிதாகாரத்தாலே மூன்றக்ஷரமாய், மூன்று பதமாய்,[2] மூன்றர்த்தப்ரகாசகமாய், [3] ஸம்ஹிதாகாரத்தாலே ஏகாக்ஷரமாய், ஏகபதமாய், ஏகார்த்தப்ரகாசகமாயிறே இருப்பது.

இந்த அக்ஷரத்ரயத்தினுடையவும் உத்பத்திக்ரமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்.

**ஸூ.-(௩௩) மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டினாற்போலே மூன்று வேதத்திலும் மூன்றக்ஷரத்தையும் எடுத்தது.**

---

1 "ஓமித்யேகாக்ஷரம்" என்று ஶ்ருதி சொன்னதற்கு விரோதமாக, மூன்று திருவக்ஷரமென்று அருளிச்செய்தது எங்ஙனே பொருந்தும்?" என்ற கேள்விக்கு உத்தரம் அருளிச்செய்கிறார் 'அஸம்ஹிதாகாரத்தாலே' என்று தொடங்கி. அஸம்ஹிதாகாரம்-பிரிந்திருக்கும் நிலையிலுள்ள ரூபம். 2 லுப்த சதுர்த்தியோடுகூடின அகாரம் - பகவச்சேஷத்வத்தையும், உகாரம் - அநந்யார்ஹத்வத்தையும், மகாரம் - அநந்யார்ஹபகவச்சேஷத்வத்துக்கு ஆஶ்ரயமாய ஜ்ஞாதாவான ஜீவனையும் காட்டுமென்க. 3 ஸம்ஹிதாகாரம் - சேர்ந்திருக்கும் நிலையிலுள்ள ரூபம்.

(வ்யா) 'மூன்றுகாழியிலே' என்று தொடங்கி (௫௪) "பூரிதி ருக்வேதா தஜாயத, புவ இதி யஜுர்வேதாத், ஸுவரிதி ஸாமவேதாத், தாநி ஶுக்ராண்யப்யதபத், தேப்யோऽபிதப்தேப்யஸ்த்ரயோ வர்ணா அஜாயந்த, அகார உகார மகார இதி, தாநேகதா ஸமபரத் ததேததோமிதி" [பூரிதி ருக்வேதாத் அஜாயத, புவ இதி யஜுர்வேதாத், ஸுவரிதி ஸாமவேதாத், தாநி ஶுக்ராண்யப்யதபத், தேப்யோபிதப்தேப்யஸ்த்ரயோ வர்ணா அஜாயந்த, அகார உகார மகார இதி, தாநேகதா ஸமபரத் ததேததோமிதி] என்றும், (௫௫) "அகாரஞ்சாப்யுகாரஞ்ச மகாரஞ்ச ப்ரஜாபதி:। வேதத்ரயாந்நிரப்ருஹத் பூர்புவஸ்ஸுவரிதீதி ச" [அகாரஞ்சாப்யுகாரஞ்ச மகாரஞ்ச ப்ரஜாபதி:- வேதத்ரயாந்நிரப்ருஹத் பூர்புவஸ்ஸுவரிதிச] என்றும் ஶ்ருதி ஸ்ம்ருதிகளிற் சொல்லுகிறபடியே ருக்யஜுஸ்ஸாமரூபமான வேதத்ரயத்தில் நின்றும், "பூ: புவ: ஸுவ:" என்கிற வ்யாஹ்ருதித்ரயத்தையும் தோற்றுவித்து, அந்த வ்யாஹ்ருதி த்ரயத்தையும் பொன் ஓட்டைக்கும்போலே தன் ஸங்கல்பத்தாலே ஓட்டைவைத்து அவற்றில் நின்றும் அகார உகார மகாரங்களாகிற அக்ஷரங்கள் மூன்றும் அடைவே தோன்றும்படி பண்ணி, இப்படி ஸர்வேஶ்வரன் ஸம்ருத்தரித்தபடியைத் திருவுள்ளம்பற்றி, பாத்ரத்ரயகதமான தயிரைத் தனித்தனியே கடைந்து, தத்ஸாரமான வெண்ணெயை வாங்கித் திரட்டினாற்போலே, மூன்று வேதத்திலும் மூன்றக்ஷரத்தையும் எடுத்தது என்கிறார்.

இத்தால் பலிதார்த்தத்தை அருளிச்செய்கிறார்.

**ஸூ-(௩௪) ஆகையால், இது ஸகலவேதஸாரம்.**

(வ்யா) 'ஆகையால் இது ஸகலவேதஸாரம்' என்று அதாவது - அக்ஷரத்ரயமும் ஒரோ வேதத்தினுடைய ஸாரமாக [1] ஸம்ருத்தருதமாகையாலே இவ்வக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவம் ஸகலவேத ஸாரம் என்றபடி.

ஆக, "இது தன்னிற்சொல்லுகிற அர்த்தம்" என்று தொடங்கி இவ்வளவும் - இம்மந்த்ரத்தினுடைய வாக்யார்த்தத்தைப்பட, அக்ஷர

---

1 ஸம்ருத்தருதம் - எடுக்கப்பட்டது

ஸங்கையையும், பதஸங்கையையும், பதத்ரயமும் அர்த்தத்ரய ப்ரதிபாதகமென்னு மதையும், அதில் ப்ரதமபதம் இன்னதென்னு மதையும், அதுதான் அக்ஷரத்ரயாத்மகமா யிருக்குமென்னுமதையும், அவ்வக்ஷரத்ரயமும் வேதத்ரயஸாரமாக உத்பந்ந மாகையாலே தத்ஸமுதாயமான ப்ரணவம் ஸகலவேதஸார மென்னுமதையும் அருளிச்செய்தாராயிற்று

இனி, இவ்வக்ஷரத்ரயத்துக்கும் அடைவே அர்த்தம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் அகாரார்த்தத்தை அருளிச்செய்கிறார்

**ஸூ.-(நரு) 1 இதில் அகாரம்-ஸகலசப்தத்துக்கும் காரணமாய் நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே, ஸகலஜகத்துக்கும் காரணமாய ஸர்வரக்ஷகனை எம்பெருமானைச் சொல்லுகிறது**

(வ்யா) 'இதில் அகாரம்' என்று தொடங்கி அதாவது - இவ்வக்ஷரத்ரயத்திலும் வைத்துக்கொண்டு ப்ரதமாக்ஷரமான அகாரம் - (நிரு) 2 "நாமரூபஞ்ச பூதாநாம் க்ருத்யாநாஞ்ச ப்ரபஞ்சநம் । வேதசப்தேப்ய ஏவாதௌ தேவாதீநாம் சகார ஸ:" [நாமரூபஞ்ச பூதாநாம் க்ருத்யாநாஞ்சப்ரபஞ்சநம் - வேதசப்தேப்ய ஏவாதௌ

1 இந்த வாக்யத்துக்கு இரண்டு யோஜனை உண்டு, அவை வருமாறு - முதல் யோஜனை - 'நாராயணபதம்' ஸமஸ்தவஸ்து சரீரகனென்று தெரிவிப்பதன் மூலமாக, ஈச்வரனே உபாதாநகாரண னென்று தெரிவித்தும் ஸர்வரக்ஷகனென்று தெரிவித்தும் போருகையாலே, அந்த நாராயண சப்தத்தின் ஸங்க்ரஹமான அகாரமும் - ஸகல சப்தத்துக்கும் காரணமாயிருக்கும் தனது தன்மையால் தன்னால் ப்ரதிபாதிக்கப்படுவன ஸகலவஸ்துக்களுக்கும் காரணனென்பதையும், 'அவ-ரக்ஷணே' என்கிற தாதுவினடியாகப் பிறப்பதால் ரக்ஷகனென்பதையும் தெரிவிக்குமென்பது கருத்து 'ஸகல சப்தத்துக்குங் காரணமாய்' என்ற மூலத்தின்பின் 'அவ-ரக்ஷணே' என்ற தாதுவிலிருந்து நிஷ்பந்நமாய்' என்று அத்யாஹரித்துக்கொள்ளவேணும் இரண்டாம் யோஜனை - அகாரம் தான் ஸகல சப்தத்துக்கும் காரணமாயிருக்கையாலே ஸகலஜகத்காரணனை எம்பெருமானைச் சொல்லுகின்றது, நாராயணபத ஸங்க்ரஹமாயிருத்தலாலே ஸர்வரக்ஷகனை எம்பெருமானைச் சொல்லுகின்றது என்பது 2 'நாமரூபஞ்ச' என்பது முதல் நான்கு ப்ரமாணங்கள்-அகாரம் ஸகல சப்தத்துக்குங் காரணமாகும் வழியை நிரூபிப்பன.

தேவாதீநாஞ்சகாரஸ ]என்கிறபடியே லௌகிகஸகலஶப்தங்களுக்கும் வேதம் காரணமாய், (ருஎ) "ப்ரணவாத்யாஸ்ஸ்தா வேதா:" [ப்ரணவாத்யாஸ்தத்ராவேதா ] (ருஅ) "ஓங்காரப்ரபவா வேதா:" [ஓங்காரப்ரபவாவேதா] இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே அந்தவேதங்களுக்கும் ப்ரணவம் காரணமாய், (ருகூ) "தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய" [தஸ்யப்ரக்ருதிலீநஸ்ய] என்கிறபடியே அந்தப்ரணவந்தனக்குத் தான் காரணமாயிருக்கையாலே (சூ0) "அகாரோ வை ஸர்வா வாக்" [அகாரோவைஸர்வாவாக] (சூக) "ஸமஸ்தஶப்தமூலத்வாதகாரஸ்ய ஸ்வபாவத:" [ஸமஸ்தஶப்தமூலத்வாத்காரஸ்ய ஸ்வபாவத:] என்கிறபடியே ஶப்தஜாதத்துக்கும் காரணமாய், ஸர்வேஶ்வரன் ஸமஸ்த வஸ்துஶரீரதயா ஸர்வரக்ஷகனாயிருக்கும்படியைப் ப்ரதிபாதிக்கிற நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே (சூஉ) "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே, யேந ஜாதாநி ஜீவந்தி" [யதோவா இமாநிபூதாநிஜாயந்தே, யேநஜாதாநி ஜீவந்தி] (சூரு) "ஸர்வஸ்ருஜ்யஸ்ய ஸம்ஹர்த்தா ஸர்வபாத்ருத்வரக்ஷிதா" [ஸர்வஸ்ருஜ்யஸ்யஸம்ஹர்த்தா ஸர்வபாதயத்திச பால்யதேச] இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே எல்லாஜகத்துக்குங் காரணமாய் எல்லார்க்கும் ரக்ஷகனாயிருக்கும் எம்பெருமானைச் சொல்லுகிறதென்கை இத்தால், இவ்வக்ஷரத்தில் 1 ப்ரக்ருத்யர்த்தமான காரணத்வமும், தாத்வர்த்தமான ரக்ஷகத்வமும் சொல்லிற்றாயிற்று இவ்வகாரத்துக்கு 2 நாராயணபதஸங்க்ரஹதயா ரக்ஷகவாசித்வம் சொல்லும்போதும், தாதுஸித்தவேஷத்தை அவலம்பித்தே சொல்லவேணுமிறே

'ரக்ஷிக்கையாவதுதான் எது?' என்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார்

---

1 தான் ஸர்வஶப்தங்களுக்கும் ப்ரக்ருதியாயிருக்குந் தன்மைக்கு ஏற்பத் தனக்கு வாச்யனான [அர்த்தமான] ஈஶ்வரனும் ஸகல வஸ்துக்களுக்குங் காரணனென்பதும் 2 நாராயணபத ஸங்க்ரஹதயா ரக்ஷகவாசித்வம் சொல்லுவது - இரண்டாவது யோஜனையில் அந்தயோஜனையிலும் அகாரத்துக்கு ரக்ஷகவாசித்வம் மூலத்திற் சொல்லப்படாமலிருந்தாலும், 'அவ' என்ற தாதுவிலிருந்து தோன்றிய ஶப்தமென்பதுபற்றியே அந்த அகாரத்துக்கு ரக்ஷகத்வம் சொல்லவேண்டியிருப்பது போலவே முதல் யோஜனையிலும் சொல்லிக்கொள்ளவேணுமென்பது வாக்யத்தின் கருத்து

ஸூ – (௩௯) ரக்ஷிக்கையாவது–விரோதியைப் போக்குகையும், அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்

(வ்யா) 'ரக்ஷிக்கையாவது' என்று தொடங்கி. அதாவது–ரக்ஷகத்வந்தான் 1 அநிஷ்டநிவர்த்தகத்வ 2 இஷ்டப்ராபகத்வ ரூபேண த்விவிதமாகையாலே, ஈஸ்வரன் சேதநரை ரக்ஷிக்கையாவது அவர்களுக்கு துக்காவஹமான விரோதியைப் போக்குகையும், ஸுகாவஹமான அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும் என்கை.

'இவர்களுக்கு இவன் போக்கும் விரோதி ஏது? கொடுக்கும் அபேக்ஷிதம் ஏது?' என்ன, அருளிச்செய்கிறார்

ஸூ – (௪௦) இவை யிரண்டும் சேதநர் நின்றநின்ற அளவுக்கு ஈடாயிருக்கும்

(வ்யா) 'இவையிரண்டும் சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாயிருக்கும்' என்று 'சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாயிருக்கும்' என்றது–தத்தததிகார அநுகுணமாயிருக்கு மென்றபடி.

இதுதன்னை 3 வ்யக்தமாக அருளிச்செய்கிறார் மேல் —

ஸூ – (௪௧) ஸம்ஸாரிகளுக்கு விரோதி–ஸ்தருபீடாதிகள், அபேக்ஷிதம்–அந்நபாநாதிகள், முமுக்ஷுக்களுக்குவிரோதி–ஸம்ஸாரஸம்பந்தம், அபேக்ஷிதம்–பரமபதப்ராப்தி, முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி–கைங்கர்யஹாநி, அபேக்ஷிதம்–கைங்கர்யவ்ருத்தி

(வ்யா) 'ஸம்ஸாரிகளுக்கு' இத்யாதி. அதாவது–4 தேஹாத்மாபிமாநிகளும் ஸ்பர்த்தாதிவிஷயாநுபவமே 5 யாத்ரையாயிருக்கும் ஸம்ஸாரிகளுக்கு நிவார்த்யமான விரோதி–ஸ்தருக்களால் வரும் நலிவு தொடக்கமானவை, ப்ரார்த்யமான அபேக்ஷிதம்–சோறு தண்ணீர் முதலானவை யென்கை 'ஸ்தருபீடாதிகள்' என்கிறவிடத்தில

1 அநிஷ்டநிவர்த்தகத்வம் – அநிஷ்டங்களைப் போக்குமவனாகை 2. இஷ்டப்ராபகத்வம்–இஷ்டங்களை அடையச்செய்யுமவனாகை 3 வ்யக்தமாக–ஸ்பஷ்டமாக 4 தேஹாத்மாபிமாநம்–தேஹமே ஆத்மா என்ற அபிமானம் ஆதி ஸ்பதத்தால, ஸ்வஸ்வாதந்த்ர்யத்தை நினைக்கிறது 5 யாத்ரை–போதுபோக்கு

'ஆதி' ஶப்தத்தாலே 1 ஆதிவ்யாதி முதலானவற்றால் வரும் பீடைகளைச் சொல்லுகிறது 'அந்நபாநாதிகள்' என்கிறவிடத்தில் 'ஆதி' ஶப்தத்தாலே 2 ஸ்ரக் வஸ்த்ர ஆபரண அங்கராக அங்கநாலிங்கநாதிகளைச் சொல்லுகிறது

'முமுக்ஷுக்களுக்கு' இத்யாதி அதாவது — ஸம்ஸாரத்தில் 3 அடிக்கொதித்துப் பரமபதத்திலே போக ஆசைப்பட்டாநிற்கும் முமுக்ஷுக்களுக்கு நிவர்த்யமான விரோதி- 4 *பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்புமாய்க்கொண்டு இவ்விபூதியிலேயிருக்கையாகிற ஸம்ஸாரஸம்பந்தம், ப்ராப்யமான அபேக்ஷிதம்- பகவதநுபவார்த்திகளுக்கு அநுகூலமான பரமபதத்தை ப்ராபிக்கை யென்கை

'முக்தர்க்கும்' இத்யாதி அதாவது — நிவ்ருத்தஸம்ஸாரராயும் 5 அஸ்பருஷ்டஸம்ஸாரகந்தராயும், 6 பகவதநுபவ ஜநிதப்ரீதிகாரித கைங்கர்யபரராயுமிருக்கும் முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி- 7 வகுத்தசேஷியான ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே ஸ்வரூபாநுரூபமாகப் பண்ணிக்கொண்டு போரும் கைங்கர்யத்துக்கு வரும் 8 விச்சேதம், அபேக்ஷிதம் - உத்தரோத்தரம் அடிமை செய்து செல்லுகையாகிற கைங்கர்யவ்ருத்தி யென்கை

ஆக, இப்படி அதிகாராநுகுணம் விரோதியைப்போக்கி அபேக்ஷிதத்தைக் கொடுக்கையால் ஈஶ்வரனே ஸர்வரக்ஷகனென்னுமிடம் சொல்லிற்றாயிற்று

---

1 ஆதி-மாநஸிகமான ஸங்கடம் 2 ஸ்ரக்—புஷ்பமாலை அங்கராகம்- உடம்பிற் பூசிக்கொள்ளும் சந்தநம் முதலியன 3 அடிக்கொதித்து - கேட்டை விளைக்குமென்று அறிவு தலையெடுத்து என்றபடி 4 பொய்ந்நின்ற ஞானம்-தேஹாத்மாபிமானம் பொல்லாவொழுக்கு - அந்தத்தேஹாத்மாபிமானவாஸனை 5 அஸ்பருஷ்டஸம்ஸாரகந்தர்-ஸம்ஸாரத்தின் ஸம்பந்தம் ஒருபோதும் இல்லாதவரென்றபடி 6 பகவதநுபவஜநித ப்ரீதிகாரித கைங்கர்யபரர்-பகவானை அநுபவித்ததனாலுண்டாகும் ப்ரீதியினால் செய்விக்கப்பட்ட [தூண்டப்பட்ட] கைங்கர்யத்தில் மனமூன்றினவர் 7 வகுத்த சேஷி-ப்ராப்தனான சேஷி 8 விச்சேதம்-இடைவிடுகை

* திருவிரு-க

'இப்படி ஈச்வரனேயோ பின்னை எல்லாரையும் ரக்ஷிக்கிறவன்? லோகத்திலே மாதா பிதாக்கள் ப்ரப்ருதி தேவதாந்தர பர்யந்தமாக ரக்ஷகராய்ப் போருகிறவர்கள் பலரும் இல்லையோ?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ-(௨௯) 'ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லர்' என்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்**

(வ்யா) 'ஈச்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்' என்று அதாவது- 1 நிருபாதிக பந்துவாய், ஸர்வகாலமும் கைவிடாதே நோக்கிக்கொண்டு போரும் ஸர்வேச்வரனை யொழிந்த 2 ஔபாதிக பந்துக்களான மாதாபித்ராதிகளும், 3 அர்வாசீநரான தேவதாந்தரங்களும் ரக்ஷகரல்லரென்னுமிடம் ஸஹேதுகமாக ப்ரபந்நபரித்ராணமென்கிற ப்ரபந்தத்திலே சொன்னோம்; அதிலே கண்டுகொள்வதென்கை.

அநந்தரம், ஆர்த்தபலத்தாலே இப்பதத்தில் அநுஸந்திக்கப்படும் ஸ்ரிய:பதித்வத்தை அருளிச்செய்கிறார்

**மூ-(௩௦) ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே, இதிலே, ஸ்ரீமத்பதமும் அநுஸந்தேயம்**

(வ்யா) 'ரக்ஷிக்கும்போது' என்று தொடங்கி. அதாவது- (௯௪) "லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா। ரக்ஷகஸ்ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபி ச கீயதே" [லக்ஷ்மியாஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா - ரக்ஷகஸ்ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபிசகீயதே] என்கிறபடியே ரக்ஷகனான ஈச்வரன் சேதநரை ரக்ஷிக்கும் தசையில் இவர்களுடைய அபராதங்களைக் கண்டால், தன் ஸ்வாதந்த்ர்யத்தாலேயாதல் உபேக்ஷியாமற் செய்கைக்கு

---

1 நிருபாதிகபந்து - காரணத்தாலான பந்துத்வமில்லாமல் ஸ்வதஸ்ஸித்தமான பந்துத்வமுள்ளவன். 2 ஔபாதிகபந்துக்கள் - காரணத்தால் பந்துவாக இருப்பவர்கள். 3 அர்வாசீநர்-பிற்பட்டவர்கள், புதிதாய்த் தோன்றினவர்கள் என்றபடி.

உற்பத்தியான கருப்பையை ஜநிப்பிக்கும் புருஷகாரபூதையான பிராட்டி ஸந்நிதி அவஶ்யாபேக்ஷிதமாகையாலே, ரக்ஷகனான அவனைச் சொல்லுகிற இவ்வகாரத்திலே அவனுடைய லக்ஷ்மீஸம்பந்தமும் அநுஸந்தேயமென்கை 'லக்ஷ்மீ' என்றே 'ஸ்ரீ' என்றது-(௬) 'ஶ்ரியதே இதி ஸ்ரீ:' [ஶ்ரயதே இதி ஸ்ரீ] என்கிறபடியே அவனை நித்யஸேவை பண்ணுகையாலே அவனோடு இவளுக்கு உண்டான 1 அவிநாபாவமும், (௬௬) 'ஸ்ரீயதே இதி ஸ்ரீ:' [ஸ்ரீயதே இதி ஸ்ரீ] என்கிறபடியே சேதநருக்கு இவள் நித்யஸேவ்யையாயிருக்குமென்னுமதுவும் தோற்றுகைக்காக.

இன்னமும் இவ்வகாரத்தில் ஸர்வாதனுடைய லக்ஷ்மீஸம்பந்தம் நியமேந தோற்றுமென்னுமதை ஆப்தவசநத்தாலே தர்ஶிப்பிக்கிறார்.

**சூ-(௪௧) அத்ர பகவத்ஸேநாபதிமிஶ்ரவாக்யம் — "அவன்மார்பு விட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப் பிரிவது."**

(வ்யா) 'அத்ர' இத்யாதியால் அத்ராவது-இவ்விடத்திலே ஜ்ஞாநாதிகரான ஸ்ரீஸேநாபதிஜீயர் அருளிச்செய்யும் வார்த்தை '*"அகலகில்லேன் இறையும்" என்று அவன் திருமார்பிலே நித்யவாஸம் பண்ணும் இவள், அம்மார்பைவிட்டுப் பிரியிலாயிற்று, அவனுக்கு ப்ரதிபாதகமான இவ்வக்ஷரத்தை விட்டுப் பிரிவதென்று' என்கை 'என்று' என்கிற இத்தனையும் கூட்டாதபோது, கீழோடு இவ்வாக்யம் அந்வயியாது.

இத்தால், அவன் திருமார்பில் ஸம்பந்தம் இவளுக்கு நித்யமாகையாலே அவன் தோற்றுமிடத்திலே இவளும் தோற்றுகை நியதமாகையால், அவன் திருமார்பில் 2 அந்வயத்தோபர்தி, அவனுக்கு வாசகமான அகாரத்தில் அந்வயமும் இவளுக்கு நித்யமென்றதாயிற்று.

இன்னமும் 3 இவ்வார்த்தத்தை ஸந்நிகர்ஷிக்கைக்காக ஸர்வசேதந வாசகங்களான அகார மகாரங்கள் இரண்டிலும் இவளுக்கு உண்டான அநவரதாந்வயத்தை ஸதருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்.

1 அவிநாபாவம்-விட்டுப்பிரியாமலிருக்கை 2 அந்வயத்தோபாதி-ஸம்பந்தம்போலவே 3 இவ்வார்த்தத்தை-எம்பெருமான் தோற்றுமிடத்தில் லக்ஷ்மியும் தோன்றுவளென்ற விஷயத்தை 4 அநவரதாந்வயம்-இடைவிடாத ஸம்பந்தம்

* திருவாய்மொழி-௬-௧௦-௧௦

**மூ-(சஉ) பாததாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதே யிருக்கும் மாதாவைப் போலே ப்ரதம 1 சரம பதங்களை விடாதே யிருக்கும் இருப்பு**

(வ்யா) 'பாததாவினுடைய' என்று தொடங்கி அதாவது-ஶேஷபூதையான தன்ஸ்வரூபத்துக்குச் சேருமபடி அவனை ரஸிப்பிக்கைக்காகப் பாததாவினுடைய படுக்கையையும் விடாதே ரக்ஷ்யையான தன்ஸ்வரூபத்துக்கும் பொருமபடி தத்ரக்ஷணம் பண்ணுகைக்காக ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதே இருக்கும் மாதாவானவளைப்போலே, இவளும் பாதருபூதனை ஸர்வேஶ்வரனுக்கு ப்ரதிபாதகமா யிருந்துள்ள ப்ரதமபதமான அகாரத்தையும் ப்ரஜா பூதரான சேதநர்க்கு ப்ரதிபாதகமாயிருந்துள்ள சரமபதமான மகாரத்தையும் தத்தத்விஷயத்தில் தனக்கு உண்டான ஸம்பந்தத்துக்கு ஈடாக ரஸிப்பிக்கை ரக்ஷிக்கையாகிற இவற்றைப்பற்ற, விடாதே யிருக்கு மிருப்பு என்கை

கீழ்ச்சொன்ன த்ருஷ்டாந்தத்தை ஒருவிஶேஷ நிஷ்டமாக்கி அருளிச்செய்கிறார்

**மூ-(சங) ஸ்ரீநந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாத யஶோதைப்பிராட்டியைப் போலே.**

(வ்யா) 'ஸ்ரீநந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாத' என்று தொடங்கி அதாவது-பார்யையான தன்ஸ்வரூபாநுகுணமாக ரஸிப்பிக்கைக்காக பாததாவான ஸ்ரீநந்தகோபரையும் விடாதே, மாதாவான தன்ஸ்வரூபாநுகுணமாக ரக்ஷிக்கைக்காகப் புத்ரனை க்ருஷ்ணனையும் விடாதே * "அம்பரமே" என்கிற பாட்டிற் சொல்லுகிற படியே மத்யேவாதத்திக்கும் யஶோதைப்பிராட்டியைப்போலே ப்ர

---

1 'அகாரத்தில் இவளுக்கு ஸம்பந்தமுண்டு' என்பதற்கு த்ருஷ்டாந்தம் அருளிச்செய்பவர் மகாரத்தில் இவளுக்கு அந்வயமுண்டு' என்பதற்கும் த்ருஷ்டாந்தம் அருள்ச்செய்தது - லக்ஷ்மிக்கு ஈஶ்வரகோடியில் அந்தர்பாவமே தவிரச் சேதனகோடியில் அந்தர்பாவமில்லை யென்கின்ற பக்ஷத்தை நிரஸிக்கைக்காக, லக்ஷ்மி அகாரத்தில் தோன்றுவது அர்த்தபலத்தாலே யென்றும், ஶப்தஶக்தியாலே இவளைத் தெரிவிப்பது மகாரமே யென்றும் கொள்க

* திருப்பா-கள

தம சரம பத வாசயரான ஈஸவர சேதனாக ளிருவரையும விடாதே இவனுடைய வாததிககுமபடி யெனகை

'ஈஸவரசேஷதவமாதர மொழியப பிராட்டிககும சேஷமென னுமிடம 1 இவவாசகததில இனறிககே யிருககசசெயதேயும, இவ ளுககும சேஷம எனறு நாமசொளளுகிறபடி எஙஙனே?' எனன, அருளிசசெயகிறார

**ஸூ (சச) 2 ஒருவனடிமைகொளளுமபோது கருஹிணிககெனறணறே ஆவணவோலையெழுதுவது, ஆகிலும, பணிசெயவது கருஹிணிககிறே. அதுபோலே நாம பிராட்டிககு அடிமையாயிருககுமபடி**

(வயா) 'ஒருவன' எனறு தொடஙகி அதாவது - லோகததிலே ஒருவன தாஸதாஸிகளமுதலான ஓரடிமையைக கொளளுமபோது தனககெனறே எழுதிககொளளும தொழிய, தன கருஹிணிககெ னறனறு விலையோலை யெழுதிககொளவது, ஆயிருககசசெயதே யும, அடிமைததொழில செயவது கருஹிணிககிறே, அதுபோலே ஈஸவரசேஷம எனனும அளவை இவவகாரம சொலலிறறேயாகிலும நாம பிராட்டிககு அடிமையாயிருககுமபடி யெனகை

கீழசசொனன ஹேதுககளையெலலாம அநுவதிததுககொணடு, ஈஸவரனுககும பிராட்டிககும ஒருகாலும பருதகஸதிதியிலலா மையை அருளிசசெயகிறார

**ஸூ -(சரு) ஆக, பிரிதது நிலையிலலை**

(வயா) 'ஆக, பிரிதது நிலையிலலை' எனறு

இநத 3 பருதகஸதிதயபாவததுககு இரணடு தருஷடாநதம அருளிசசெயகிறார

---

1 இவவாசகததிலினறிககேயிருகக-இவவகாரததில ஸபதசகதியாலே சொலலபபடாமலிருகக 2 பதிககு சேஷமானவை பதநிககும சேஷமென கிற நயாயததாலே, நாம பிராட்டிககு அடிமையெனறு இநத அகாரததில ஸாபதமாகச சொலலபபடாமலிருநதாலும அவனுககு சேஷமெனற மாததிர ததிலேயே அவளுககும சேஷமெனபது தனனடையே ஸிததிககுமெனபது கருதது 3 பருதகஸதிதயபாவம-பருதக-தனியே, ஸதிதி-இருததல, அபா வம-இலலாமை, விடடுபபிரியாமலளபபோதுமசோநதேயிருககை யெனறபடி

**ஸூ -(௪௬) ப்ரபையையும் ப்ரபாவானையும், புஷ்பத்தையும் மணத்தையும் போலே 1**

(வ்யா) 'ப்ரபையை' என்று தொடங்கி. அதாவது – 2 ப்ரபைக்கும் 3 ப்ரபாவானுக்கும் ப்ருதக்ஸ்திதி யில்லாதாப்போலவும், புஷ்பத்துக்கும் பரிமளத்துக்கும் ப்ருதக்ஸ்திதி இல்லாதாப்போலவுமென்கை (௯௭) "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" [அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா] (௯௮) "அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா" [அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா] என்று, ப்ரபாப்ரபாவான்களைப் போலே இருவருக்கும் ப்ருதக்ஸ்திதியில்லை யென்னுமிடம், இருவர் வாக்காலும் சொல்லப்பட்டதிறே (௯௯) "ப்ரஸூநம் புஷ்யந்தீமபி பரிமளர்த்திம் ஜிகதிஷு:" [ப்ரஸூநம் புஷ்யந்தீமபி பரிமலர்த்திம் ஜிகதிஷு:] என்கிறவிடத்திலே ஈச்வரனைப் புஷ்பஸ்தாநேயாகவும், பிராட்டியைப் பரிமளஸ்தாநேயாகவும் பட்டர் அருளிச்செய்கையாலே, புஷ்பபரிமளங்களுக்குப்போலே, இருவர்க்கும் ப்ருதக்ஸ்திதி இல்லை யென்னுமிடம் அர்த்தாத் ஸித்தம்.

இந்த ப்ருதக்ஸ்தித்யபாவத்தை அநுவதித்துக்கொண்டு, இச்சேர்த்தியே சேதநர்க்கு உத்தேச்யமாய்த் தலைக்கட்டினபடியை அருளிச்செய்கிறார்

**ஸூ -(௪௭) ஆக, இச்சேர்த்தி உத்தேச்யமாயவிட்டது**

(வ்யா) 'ஆக, இச்சேர்த்தி உத்தேச்யமாய்விட்டது' என்று 'இச்சேர்த்தி உத்தேச்யம்' என்கையாலே, இவர்களைத் தனித்தனியே விரும்புகை உத்தேச்யம் அன்று என்றபடி. இருவரையும் பிரித்து விரும்பினால், ராவணசூர்ப்பணகைகளுக்குப்போலே, அநர்த்தமே பலிக்கும்; அத்தனை இருவரையும் பற்றினாலிறே, ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போலே வாழ்வாவது

இனிமேல், இதில் விபக்த்யர்த்தம் அருளிச்செய்வதாகப் ப்ரதமவிபக்தியை நிர்த்தேசிக்கிறார்

1 ப்ரபையையும் மணத்தையும் போலே, பிரிந்து நிலை இல்லையென்று ஜீழவாக்கியத்தோடு சேரும் 2 ப்ரபை - ஒளி 3 ப்ராபாவான் - ஒளியையுடைய பொருள்.

ஸூ.-(சஅ) இதிலே, சதுர்த்தி [1] யேறிக்கழியும்

(வ்யா) 'இதிலே சதுர்த்தியேறிக் கழியும்' என்று அதாவது- இவ்வகாரத்திலே சதுர்த்தியேறி * "ஸுபாம்ஸுலுக்" [ஸுபாம்ஸுலுக்] இத்யாதி ஸூத்ரத்தாலே லுப்தமாய்ப்போமென்கை

'விபக்த்யந்தரமெல்லாம் கிடக்க, இவ்வகாரத்தில் சதுர்த்தியே றினபடிதான் எங்ஙனே?' என்கிற ஶங்கையை அநுவதிக்கிறார்

ஸூ.-(சகூ) 'சதுர்த்தியேறினபடி யென்?' [2] என்னில்,-

(வ்யா) 'சதுர்த்தியேறினபடி யென் என்னில்' என்று அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்

ஸூ.-(ருo) நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே

(வ்யா) 'நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே' என்று அதாவது - இவ்வகாரம், சதுர்த்யந்தமான நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாகையாலே, இதிலும் சதுர்த்தியேறிற்றென்கை இங்ஙன் அன்றாகில், இரண்டுக்கும் ஸங்க்ரஹவிவரணத்வம் ஸித்தியாதிறே

'இத்தால் சொல்லுகிற அர்த்தந்தான் ஏது?' என்ன, அருளிச்செய்கிறார்

ஸூ.-(ருக) இத்தால், ஈஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது

(வ்யா) 'இத்தால், ஈஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது' என்று அதாவது- இதுதான் [எo] "தாதர்த்யே சதுர்த்தீ" [தாதர்த்யே சதுர்த்தீ] ஆகையாலே, இச்சதுர்த்தியால் ஈஶ்வரனுக்கு ஶேஷமென்னுமிடம் சொல்லுகிறதென்கை

(எக) "ஸர்வம் பரவஶம் து:கம்" [ஸர்வம் பரவஶம் து:க்கம்] (எஉ) "ஸேவா ஶ்வவ்ருத்தி:" [ஸேவா ஶ்வவ்ருத்தி] என்கிற

1 ஏறிக்கழிதல்-புணர்ந்துகெடுதல் 2 முதலில் சதுர்த்தி வந்ததனாலே அதன்பொருளான ஶேஷத்வமும், விபக்தி காணப்படாமையால் கழிந்ததென் பதும் பெறப்படும் விபக்தி-வேற்றுமை யுருபு

லௌகிகந்யாயத்தைக் கொண்டு சேஷத்வத்தை துக்கரூபமாக நினைத்திருக்குமவர்கள் பண்ணும் பரஶ்நத்தை [1] அநுவதிக்கிறார்

**ஸூ-(ருஉ) 'சேஷத்வம் துக்கரூபமாகவன்றோ நாட்டிற் காண்கிறது' என்னில்,–**

(வயா) 'சேஷத்வம் துக்கரூபமாகவன்றோ நாட்டிற் காண்கிறது என்னில்' என்று

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்

**ஸூ-(ருந) அந்த நியமம் இல்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்கும் இருப்பு ஸுகமாகக் காண்கை யாலே**

(வயா) 'அந்தநியமமில்லை' என்று தொடங்கி அதாவது-நாடு தனிலே * "பணிமின்திருவருள்" இத்யாதிப்படியே [2] அபிமத விஷயத்துக்கு சேஷமாயிருக்கும் இருப்பு ஸுகரூபமாகக் காண்கை யாலே, சேஷத்வமாகில் துக்கரூபமாயிருக்குமென்கிற நியமமில்லை யென்கை

'அபிமதவிஷயத்தில் சேஷத்வம் ஸுகமாகிறது, அவ்விஷயத்தில் குணம் அடியாக வந்ததாகையாலேயன்றோ?' என்ன, அருளிச் செய்கிறார்

**ஸூ - (ருச) அகாரத்திலே கல்யாணகுணங்களைச் சொல்லுகையாலே, இந்த சேஷத்வமும் குணத்தாலே வந்தது**

(வயா) 'அகாரத்திலே' என்று தொடங்கி அதாவது-ஈஶ்வரனுடைய ரக்ஷகத்வப்ரதிபாதகமான அகாரத்திலே அந்த ரக்ஷணோ பயோகியான கல்யாணகுணங்களைச் சொல்லுகையாலே, ஈஶ்வர விஷயமான இந்த சேஷத்வமும் அந்த குணங்களடியாக வந்ததென்கை ஆகையால், இதுவும் ஸுகரூபமாயிருக்கக் குறையில்லையென்று கருத்து

---

1 அநுவதித்தல்-முன் கூறியதை மீண்டும் எடுத்துச் சொல்லுதல்
2 அபிமதவிஷயம்-இஷ்டமான விஷயம் பதி முதலிய விஷயம்
* திருவாய்-ச-க-ரு

'ஆனால், 1 ஔபாதிகமான இது ஸ்வரூபமன்றோ?' என்ன, அருளிச்செய்கிறார்

## ஸூ -(ருரு) சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்

(வ்யா) 'சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்' என்று அதாவது - உக்தவிஷயத்தில் 2 இதன்ஸ்வரூபத்துக்கு 3 குணக்ருதத்வத்தை ஹேதுவாகச் சொல்லுகையாலே அந்த குணக்ருதத்வம் இங்கும் உண்டென்னுமிடத்துக்குச் சொன்ன இத்தையொழிய, 4 ஆத்தஸத்தியை நிரூபிக்கால (எங) "ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்" [ஸ்வத்வமாத்மநிஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்] (எச) "ஆத்மதாஸ்யம் ஹரேஸ்ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதா ஸ்மர" [ஆத்மதாஸ்யம் ஹரேஸ்ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதாஸ்மர] (எரு) "தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: நாந்யதா லக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷே ததைவ ச" [தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந பரமாத்மந - நாந்யதாலக்ஷணந்தேஷாம் பந்தே மோக்ஷே ததைவச] இத்யாதிகளிலே 5 இத்தை ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமாகச் சொல்லுகையாலே, சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம் என்கை.

'சேஷத்வமேயென்று 6 அவதரிப்பானென், ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமான ஆத்மவஸ்துவுக்கு? 7 அல்லாதபோதும் ஸ்வரூபம் இல்லையோ?' என்ன, அருளிச்செய்கிறார்

## ஸூ - (ருசு) சேஷத்வம் இல்லாதபோது ஸ்வரூபம் இல்லை

(வ்யா.) 'சேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை' என்று 8 சேஷத்வமில்லாதபோது ஆத்மாபஹாரரூபமான ஸ்வாதந்த்ரிய

---

1 ஔபாதிகம் - காரணத்தால்வந்தது 2 இதன் - சேஷத்வத்தின் 3 குணக்ருதம் - குணங்களாலே வந்தது 4 ஆத்தஸத்தி-இங்கே, ஆத்மவஸ்து இருக்குமிருப்பு 5 இத்தை-சேஷத்வத்தை 6 அவதரித்தல்-அவதாரணப்பொருளைக் காட்டும் ஏகாரத்தை இட்டுச் சொல்லுதல், அவதாரணப்பொருள் - நிச்சயப்பொருள், பிரிநிலைப்பொருளை உட்கொண்ட தேற்றப்பொருள் 7 அல்லாதபோது-சேஷமாகாதபோது 8 சேஷத்வமில்லாதபோது-தானு பகவானுக்கு சேஷமென்கிற ஜ்ஞாநமில்லாதபோது

ப்ரக்ருதி நடக்கையாலே, ஸ்வரூபம் அழிந்துவிடும் என்னுமத்தை தர்சிப்பிக்கிறார், மேலிரண்டு வாக்யத்தாலே.

## ஸூ - (௫௭) ஆத்மாபஹாரமாவது - ஸ்வதந்த்ரமென்கிற நினைவு; ஸ்வதந்த்ரமாம்போது இல்லையாய்விடும்.

(வ்யா) 'ஆத்மாபஹாரமாவது' என்று தொடங்கி. அதாவது- (௭௬) "யோऽந்யதா ஸந்தமாத்மாநம் அந்யதா ப்ரதிபத்யதே । கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" [யோऽந்யதா ஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே- கிந்தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா] என்று ஸர்வபாபமூலமாகச் சொன்ன ஆத்மாபஹாரமாவது- தன் ஸ்வரூபம் ஸ்வதந்த்ரம் என்கிற ப்ரதிபத்தி; ஸ்வதந்த்ரம் ஆமளவில் (௭௭) "அஸந்நேவ" [அஸந்நேவ] என்கிறபடியே [1] ஸ்வரூபம் இல்லையாய்விடும் என்கை. ஆகையால், சேஷத்வம் இல்லாதபோது ஸ்வரூபமில்லை என்னத்தட்டில்லையென்று கருத்து.

ஆக, ப்ரக்ருத்யர்த்தமான ஈச்வரனுடைய காரணத்வமும், தாத்வர்த்தமான ரக்ஷகத்வமும், அர்த்தபலத்தால் வந்த ச்ரிய:பதித்வமும், [2] ப்ரத்யயஸித்தமான சேதனசேஷத்வ [3] ப்ரதிஸம்பந்தியான சேஷித்வமும் ஆகிற அகாரார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

அனந்தரம் மத்யமாக்ஷரமான உகாரத்துக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக உபக்ரமிக்கிறார்.

---

1 தான் சேஷனென்கிற உணர்ச்சியில்லாதவன் 'அஸத்' [ஸத்தையற்றவன்] என்று சொல்லப்படுகையாலே, ஸ்வரூபமில்லையென்றது, அன்றி, 'தான் பகவானுக்கு சேஷபூதன்' என்கிற உண்மைஞானமில்லாதவனுக்கு 'தான் ஸ்வதந்த்ரன்' என்கிற அஜ்ஞானமே நிலைநிற்கையால், ஜ்ஞானமும் ஜ்ஞானவிசேஷமான ஆனந்தமும் இல்லையாகையாலே, ஸ்வரூபமில்லையென்று சொன்னதாகவுமாம். 2 ப்ரத்யயம்-இங்கே, அகாரத்துக்குப்பின்னே லோபித்துள்ள சதுர்த்தீவிபக்தி. 3 ப்ரதிஸம்பந்தி-எதிர்த்தட்டான ஸம்பந்தமுள்ளவன், ஆத்மாவானவன் பகவானுக்கு சேஷன் என்றால், 'பகவான் ஆத்மாவுக்கு சேஷி' என்று தலைக்காணக் [சேஷன்-அடியவன், சேஷி-தலைவன்]

மூ- (ருஅ) 1 ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணார்த்தம்

(வ்யா) 'ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணார்த்தம்' என்று அதாவது - (எஅ) ‘‘தமேவ ஹி தஜ்ஜ ஸஹ்யோ ஜக்த்’’ [தமேவபுத்ரந் தந்து பயமா இதம்] என்றும், (எக) ‘‘த்வமேவாஸ்மத் ஊர்த்வ ஜாயாஸ்தத் ஸ்வஸ்தம் ஸோ ஹரஹ ஸோ:’’ [நமக்கு நீயே ஆகிலும் கவாபுஸ ... ஸாயிஸ்தத்துசந்தரமா] என்றும் இத்யாதிகளிலே ஏவகாரஸ்தாநத்திலே உகாரத்தைப் ப்ரயோகிக்கக் காண்கையாலே ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணத்தை அர்த்தமாக உடைத்தாயிருக்கும் என்கை.

'அவதாரணத்துக்கு அர்த்தம் 2 அயோகவ்யவச்சேதமாதல் அந்யயோகவ்யவச்சேதமாதல் ஆகையாலே, இவ்வவதாரணந்தான் சொல்லுகிறது எது?' என்ன அருளிச்செய்கிறார்.

மூ- (ருக) இத்தால், பிறர்க்கு ஶேஷம் அன்று என்கிறது.

(வ்யா) இத்தால், பிறர்க்கு ஶேஷமன்றென்கிறது' என்று அதாவது - 3 அவதாரணவாசகமான இவ்வுகாரத்தால், கீழ் ஈஶ்வரர்க்கு ஶேஷமாகச் சொன்ன இவ்வாத்மவஸ்து அந்யர்க்கு ஶேஷமன்று

1 ஸ்தாநப்ரமாணம் - ஒருபதம் இருக்கவேண்டிய இடத்தில் வேறொரு பதம் இருந்தால், அந்தப் பதத்தின் பொருள்தான் இதற்கும் பொருள் என்று கொள்வது. ஏவகாரம் இருக்கவேண்டிய இடத்தில் உகாரம் இருத்தலால், உகாரத்துக்கு ஏவகாரத்தின் பொருளைக் கொள்ளவேண்டிடதாயிற்றென்க.
2 அயோகவ்யவச்சேதம்-ஸம்பந்தமில்லாமையை தவிர்த்தல். அதாவது சங்கினுடைய வெண்மையைத் தெரிவிக்கையென்றபடி. ஸங்க பாண்டர ஏவ [வெண்மையே] என்றாற்போல விஶேஷணத்தோடு சேர்ந்த ஏவகாரம் 'சங்கு வெண்மையோ அன்றோ?' என்று தோன்றும் ஐயத்தை ஒழித்து வெண்மைதானென்ற எண்ணத்தை நிலைநிறுத்துதலால், அயோகவ்யவச்சேதமாம். அந்யயோகவ்யவச்சேதமாவது-வேறொன்றன் ஸம்பந்தமுண்மையை நிவர்த்திப்பது, பிறிதினியைபு நீக்குவது என்று தமிழராற் சொல்லப்படும். 'பார்த்த ஏவ தநுர்த்தர' [அர்ச்சுனனே வில்லாளி] என்றாற்போல விஶேஷ்யத்தோடு சேர்ந்த ஏவகாரம் வேறொருவரும் வில்லாளிகளல்லரென்ற கருத்தைத் தருதலால், அந்யயோகவ்யவச்சேதமாம். 3 அகாரமென்ற விஶேஷ்யத்தோடு ஏவகாரார்த்தமான உகாரம் சேர்ந்திருத்தலால், இங்கும் அந்யயோகவ்யவச்சேதமே பொருளாம்.

என்று மிடத்தைச் சொல்லுகிறதென்னை 1 'சதுர்த்தியாலே ஸ்வா சேஷத்வம் ப்ரதிபாதிதமாகச்செய்தே, அந்யசேஷத்வம் ப்ரஸக்தமாமோ?' என்னில், லோகத்திலே ஒருவனுக்கு சேஷமான க்ருஹ க்ஷேத்ரபுத்ரதாராதிகள் வேறேயும் சிலர்க்கு சேஷமாயிருக்கக் காணாநின்றோமே, அப்படிப்பட்ட அந்ய சேஷத்வம் இந்த ஸ்தலத்திலும் உண்டோ?' என்று ஒரு சங்கையை உதிக்குமிறே, ஆகையாலே, தாத்ருசமான அந்யசேஷத்வம் இதுக்கு இல்லை யென்று மிடத்தை ப்ரதிபாதிக்கிறது, உகாரம்.

அங்ஙனன்றிக்கே, இவ்வுகாரத்தாலே லக்ஷ்மீசேஷத்வம் சொல்லுகிறது என்பாரு முண்டென்கிறார்

மூ-(௬௰) பெரியபிராட்டியார்க்கு சேஷமென்கிறது என்றுஞ் சொல்லுவர்கள்

(வ்யா) 'பெரியபிராட்டியார்க்கு சேஷமென்கிறது என்றுஞ் சொல்லுவர்கள்' என்று அதாவது-(அ௦) "அகாரஸ்சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர்வாசக இஷ்யதே। உகாரஸ்சித்ஸ்வரூபாயாஸ் ஸ்ரியோவாசீ தயோர்விது:। மகாரஸ்து தயோர்தாஸ இதி ப்ரணவலக்ஷணம்॥" [அகாரஸ்சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர்வாசக இஷ்யதே - உகாரஸ்சித் ஸ்வரூபாயாஸ் ஸ்ரியோவாசீ கதாவிது - மகாரஸ்து தயோர்தாஸ இதி ப்ரணவலக்ஷணம்] என்றும், (அக) "அகாரேணோச்யதே விஷ்ணுஸ் ஸர்வலோகேஸ்வரோ ஹரி:। உத்த்ருதா விஷ்ணுநா லக்ஷ்மீ ருகாரேணோச்யதே ஸதா। மகாரஸ்து தயோர்தாஸ: ஸ்ரீநாராயணயோ ஸதா। ஆத்மந சேஷபூதஸ்ய வாசக: ஸ்ருதிசோதித:" [அகாரேணோச்யதே விஷ்ணு: ஸர்வலோகேஸ்வரோ ஹரி: - உத்த்ருதா விஷ்ணுநாலக்ஷ்மீ ருகாரேணோச்யதே ஸதா - மகாரஸ்து தயோர்தாஸ ஸ்ரீநாராயணயோஸ்ஸதா - ஆத்மந சேஷபூதஸ்ய வாசகஸ் ஸ்ருதி சோதித] என்றும் இத்யாதிகளாலே பகவச்சாஸ்த்ரத்திலே அகாரத்தை பகவத்வாசகமாகவும், உகாரத்தை லக்ஷ்மீவாசகமாகவும் மகார

1 'லோபி சதுர்த்திக்குப் பின்னே உகாரம் சேருகையாலும், அங்கே அந்யசேஷத்வம் சொல்லப்படாமையாலும், அதை நிவர்த்திப்பிக்கவேண்டிய அவசியமென்?' என்பது, சங்கைக்குக் கருத்து.

த்தை ததுபயசேஷபூத ஜீவவாசகமாக்கச் சொல்லுகையாலே, உகாரத்தை அவதாரணவாசகமாகக் கொள்ளாதே, லக்ஷ்மீவாசகமாக்கக் கொண்டு, இவ்வுகாரத்தாலே பெரியபிராட்டியார்க்கு சேஷி என்கிறதென்னும் நிர்வஹிப்பார்களென்கை

1 அத்தைப் பற்றவும் பூர்வபாஜ்ஞம்ய முக்யமென்னுமத்தை அருளிச்செய்கிறார்

**ஸூ.–(௯௧) அதிலும், அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதானம்.**

(வ்யா) 'அதிலும் அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதானம்' என்று அதாவது - பெரியபிராட்டியார்க்கு சேஷமாகையாகிற அதிலுங்காட்டில் கீழ்ச்சொன்ன பகவச்சேஷத்வத்துக்கு விரோதியான அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதானாபேக்ஷிதம் என்கை

'அந்யசேஷத்வம் இப்படி க்ரூரமோ?' என்ன, அதன் க்ரௌர்யத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்

**ஸூ.–(௯௨) தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை நாய்க்கு இடுமாபோலே, ஈச்வரசேஷமான ஆத்மவஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை**

(வ்யா) 'தேவர்களுக்கு' என்று தொடங்கி அதாவது- ஆராத்யரான இந்த்ராதி தேவர்களுக்கு போக்யதயா சேஷமாகக் கல்பிதமான 2 புரோடாசத்தை நாஸநபாஸநாதிகளுக்குத் அநா

1 ஸ்ரீபாஞ்சராத்ரத்திலே உகாரத்தை லக்ஷ்மீவாசகமாகச் சொல்லியிருக்கவும், உகாரத்துக்கு அவதாரணார்த்தம் கொள்கையே முக்கியமென்னலாமோ வென்னில், - ப்ரணவார்த்தத்தை விவரிக்கிற ச்ருதிதானே 'பகவத ஏவாஹம் அஸ்மி' என்று ஏவகாராந்தமாக விவரிக்கையாலும், "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க்குரியேனோ" என்பது முதலிய இடங்களில் ஆழ்வார்கள் உகாரார்த்தம் அநந்யசேஷத்வமென்றுந்து யென்பது தோன்ற அருளிச்செய்கையாலும், உகாரத்துக்கு அவதாரணார்த்தம் கொள்ளாத பக்ஷத்தில் அவச்யாபேக்ஷிதமான அநந்யசேஷத்வ வ்யாவ்ருத்திக்காக 'ஸர்வம் வாக்யம் ஸாவதாரணம்' என்கிற ந்யாயத்தினாலாவது அவச்யமாக அவதாரணார்த்தக ஏவகாரத்தை அத்யாஹரிக்கவேண்டியிருத்தலாலும், பதிபத்நீ ந்யாயத்தாலே லக்ஷ்மீசேஷத்வம் ஸ்வநடையே ஸித்தித்துவிடுமாகையாலும், ஓரானவழியாய பூர்வாசார்யர்கள் இங்ஙனே அருளிச்செய்து போருவதென்னுமென்க 2 புரோடாசம்-ஹவிஸ்

ஹேமமப்பு நிஹீநமாயிருக்கிற நாயக்கு இடுமாபோலே இருப்பதொன்று, 1 பராபதசேஷிபான ஈஸ்வரனுக்கு சேஷமான ஆதமவஸ்துவை ஸாவபாசாரத்தாலும 2 ஹேயரான ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை யென்கை

'இப்படி க்ரூரமான அந்யசேஷத்வம கழிகையே ஆதமாவுக்கு பாதாநாபேக்ஷிதம்'என்று கீழசசொன்ன அர்த்தத்தை நிர்கரிக்கிறார

**ஸூ-(௫௩) பகவச்சேஷத்வத்திலும அந்யசேஷத்வம கழிகையே பரதாநம**

(வ்யா) 'பகவச்சேஷத்வத்திலும அந்யசேஷத்வம கழிகையே பரதாநம' என்று அதாவது - லக்ஷ்யச்சேஷத்வத்திலுங்காட்டில பரதாநம என்ற 3 அளவேயன்று, பகவான தனக்கு சேஷமாயிருக்குமதிலுங்காட்டில அந்யவிஷயத்தில சேஷத்வம கழிகையே ஆதமாவுக்கு பரதாநாபேக்ஷிதமென்கை

இதுக்கு பரமாணம காட்டுகிறார

**ஸூ-(௫௪) "மறந்தும்புறந்தொழாமாந்தர்" என்கையாலே**

(வ்யா) 'மறந்தும்புறந்தொழா மாந்தர் என்கையாலே' என்று அதாவது - யமகிங்கரஸம்வாதத்தைத் திருமழிசைப்பிரான் அருளிச்செய்த * "திறம்பேன்மின்கண்டீர்" என்கிற பாட்டிலே பாகவத லக்ஷணஞ்சொல்லுகிறவளவில 'திருவடி தன்னாமம மறந்தும புறந்தொழாமாந்தர்' என்று ஸ்வாமியுடைய திருநாமத்தை மறந்தார்களாகிலும மற்றொருவிஷயத்தில சேஷவருத்திபண்ணாதவர்கள் என்று சொல்லுகையாலே யென்கை

ஈஸ்வரசேஷமான ஆதமவஸ்துவுக்கு ஸ்வசேஷத்வ பரசேஷத்வங்களிரண்டும அநர்ஹசேஷத்வமாகைபாலே, உபயத்தையும இவ்வாகாரம கழிக்கிறதென்று சொல்லி நிகமிக்கிறார

**ஸூ-(௫௫) இத்தால, தனக்கும பிறர்க்கும உரித்தன்று என்கிறது**

---

1 பராபதசேஷி - வகுத்தசேஷி 2 ஹேயர்-நிக்ருஷடர
3 அளவு - மாதரம
நானமுகன திரு கஅ

(வ்யா) 'இத்தால், தனக்கும் பிறர்க்கும் உரித்தனன்றென்கிறது' என்று அதாவது—அநந்யசேஷத்வவாசகமான இவ்வுகாரத்தாலே [1] அந்யரில் அந்யதமத்வம் அவிசிஷ்டமாகையாலே இவ்வாத்மவஸ்து தனக்கும் உரித்தன்று; கலவிபொருந்த ஸமஸாரிகளுக்கும் உரித்தன்று என்னுமிடம் சொல்லுகிறதென்கை.

ஆக, உகாரார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம், த்ருதீயாக்ஷரமான மகாரார்த்தத்தை அருளிச்செய்கிறார்.

**ழூ –(கூகா) மகாரம், இருபத்தஞ்சாம் அக்ஷரமாய் ஜ்ஞாநவாசியுமாயிருக்கையாலே, ஆத்மாவைச் சொல்லுகிறது.**

(வ்யா) 'மகாரம்' என்று தொடங்கி. அதாவது (அஉ) "ஹூதாநி வர்க்கேண வர்க்கேணேந்த்ரியாணி பஞ்ச வர்க்கேண பஞ்ச வர்க்கேண ஜ்ஞாநகர்மாக்யஸ்ய ஏந: வகாரேணைவ ஸ்தம் ஷகாரேண க்வஹங்க்ருதி: । வகாரேண ஹகாரேண ஈஹார்த்த ப்ரக்ருதிருச்யதே ॥ ஸூத்ராத் ஸகாரேண பஞ்சவிம்ஶ: ப்ரகீர்த்தித:" [பூதாநிச கவர்க்கேண சவர்க்கேணேந்த்ரியாணிச । டவர்க்கேண தவர்க்கேண ஜ்ஞாநகந்தாதயஸ்ததா ॥ மந: பகாரேணைவோக்தம் ஃகாரேண த்வஹங்க்ருதி । பகாரேண பகாரேண மஹாந்ப்ரக்ருதிருச்யதே । ஆத்மா து ஸமகாரேண பஞ்சவிம்ஶ: ப்ரகீர்த்தித] என்கிறபடியே, ப்ருதிவ்யாதி ப்ரக்ருத்யந்தமான இருபத்துநாலு தத்வத்துக்கும் வாசகமாயிருந்துள்ள ககாராதி பகாராந்தமான இருபத்துநாலு அக்ஷரமும் மேலேன்றிக்கே மகாரம் இருபத்தஞ்சாமக்ஷரமாய் [2] *"மந ஜ்ஞாநே" [மந-ஜ்ஞாநே] என்கிற தாதுவிலேயாதல், †"மநு அவபோதநே" [மநு-அவபோதநே] என்கிற தாதுவிலேயாதல் நிஷ்பந்நமாகையாலே, ஜ்ஞாநவாசியுமாயிருக்கையாலே, (அந) "பஞ்சவிம்

---

1 அந்யரில் அந்யதமத்வம் அவிசிஷ்டம் - பகவானிலும் வேறுபட்டவரென்றால் அவ்வாறு வேறுபட்டிருக்கை யென்பது ஸர்வவிஷயத்திலும் ஸமாநம் [அவிசிஷ்டம்—ஸமாநம்] 2 மந்யதே இதி ம: மநுதே இதி ம: என்றுவது மகாரத்துக்கு வ்யுத்பத்தி

* தாது-திவாதி-ஶ்யந்விகரணி † தாது-தநாதி-உவிகரணி

ஸோऽயம் புருஷ:” [பஞ்சவிம்ஶோऽயம்புருஷ] (அச) வஞ்சவிம்ஶ: ஆத்மா பவதி” [பஞ்சவிம்ஶ ஆத்மா பவதி] என்கிறபடியே 1 பஞ்சவிம்சகனாய் (அரு) “விஜ்ஞாதா புருஷ:” [விஜ்ஞாதா புருஷ] (அசு) “விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்” [விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்] என்கிறபடியே ஜ்ஞாநஸ்வரூபனுமாய், ஜ்ஞாநகுணகனுமாயிருக்கிற ஆத்மாவைச் சொல்லுகிறதென்கை

கீழ்ச்சொன்ன ஶேஷத்வம் 2 ஸர்வஸாதாரணமாகையாலே 3 த்ரிவிதாத்மவர்க்கத்தையும் இதிலே சொல்லவேணுமாகையாலே, அருளிச்செய்கிறார்

## சூ -(உஎ) இதுதான் ஸமஷ்டிவாசகம்

(வ்யா) ‘இதுதான் ஸமஷ்டிவாசகம்’ என்று அதாவது-இப்படி ஆத்மவாசகமான இம்மகாரந்தான் 4 ஆத்மஸமஷ்டிக்கு வாசகமென்கை

‘ஏகவசநம் ஸமஷ்டிவாசகமாமோ?’ என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார்

## சூ -(உஅ) ஜாத்யேகவசநம்

(வ்யா) ‘ஜாத்யேகவசநம்’ என்று அதாவது-வ்ரீஹிஸமூஹத்தைச் சொல்லுகிறவன், ‘இது ஒரு நெல்’ என்றால், அந்த ஏகவசநம், 5 ஜாதிபரமானாற்போலே, இதுவும் ஆத்மஜாதிபரமான ஏகவசநமென்கை

‘இம்மகாரத்தால், ஆத்மாவினுடைய 6 எவ்வாகாரஞ் சொல்லுகிறது?’ என்ன, அருளிச்செய்கிறார்

## சூ - (உகூ) இத்தால், ஆத்மா ஜ்ஞாதாவென்று, தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று

---

1 பஞ்சவிம்ஶகன்-இருபத்தைந்தாந் தத்துவமானவன் 2 ஸர்வஸாதாரணம்-ஸர்வாத்மஸாதாரணம் 3 த்ரிவித ஆத்மவர்க்கம்-பத்த முக்த நித்யர் என்ற மூன்று வகையான ஆத்மஸமூஹம் 4 ஆத்மஸமஷ்டி – ஆத்மஸமூஹம் 5 ஜாதிபரம்-ஜாதியைக்காட்டுங் கருத்தைக் கொண்டது 6 ஆத்மாவுக்கு ஶேஷத்வம் ஜ்ஞாநஸ்வரூபத்வம் ஜ்ஞாநாஶ்ரயத்வம் என்ற மூன்று வகையான தன்மையுள்ளதனால் இம்மூன்றில் எந்த ஆகாரம் மகாரத்தாற் சொல்லப்படுவது என்று ஶங்கை

(வ்யா) 'இத்தால்' என்று தொடங்கி அதாவது-பஞ்சவிம்ஶாக்ஷரமாய ஜ்ஞாநவாசியுமாயிருந்துள்ள இம்மகாரத்தால், 'ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மா-ஜ்ஞாநாஶ்ரயபூதனானவன்' என்று, அசேதநமான 1 தேஹத்திற்காட்டில் ஆத்மாவின் 2 வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று என்கை

'தேவோஹம், மநுஷ்யோஹம், ஸ்தூலோஹம், க்ருஶோஹம்' என்று 3 தேஹத்திலே அஹம்புத்தி வ்யவஹாரங்கள் நடவாநிற்க, அஹமர்த்தபூதனான ஆத்மா, தேஹத்தில் 4 வ்யாவ்ருத்தனென்று சொல்லுகிறபடிதான் எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார்

## சூ-(௭0) தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வஶேகரத்திலே சொன்னோம்

(வ்யா) 'தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வஶேகரத்திலே சொன்னோம்' என்று அதாவது-அநேக ஹேதுக்களாலே தேஹத்தினுடைய 5 அநாத்மத்வத்தை ஸாதியாநின்றுகொண்டு, ஆத்மாவினுடைய தத்வ்யாவ்ருத்தியைத் தத்வஶேகரமாகிற ப்ரபந்தத்திலே வ்யக்தமாகச் சொன்னோம், அதிலே கண்டுகொள்வது என்கை

6 'ஸ்வாமிஸ்வரூபகதநபூர்வகமாகத் தத்தாமமான ஶேஷத்வத்தைச் சொல்லுகை ப்ராப்தமாயிருக்க, இப்ரணவத்தனில் ப்ரதமம் மோ

1 ஆத்மா ஜ்ஞாதா என்னாமல் ஜ்ஞாநம் என்னினுமே தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லப்பட்டதாகும், ஆயினும், பரமபதத்தில் ஶுத்தஸத்வமான அசித்து ஸ்வயம்ப்ரகாஶமாகையாலும், ஜ்ஞாநத்வமென்பது ஸ்வயம்ப்ரகாஶத்வரூபமாகையாலும், அந்த அசித்தின் வ்யாவ்ருத்திக்காக 'ஜ்ஞாதா' என்ன வேண்டியதாயிற்று, ஜ்ஞாதா - தர்மபூதமான ஜ்ஞாநத்துக்கு ஆஶ்ரயன் 2 வ்யாவ்ருத்தி - வேறுபாடு 3 தேஹத்தில் அஹம்புத்திவ்யவஹாரங்கள் 'நான் என்பதன் பொருள் இவ்வுடல்தான்' என்ற எண்ணமும், அதற்கு ஏற்ற சொல்வழக்கும் 4 வ்யாவ்ருத்தன் - வேறுபட்டவன் 5 அநாத்மத்வம்-ஆத்மாவாகாமை 6 ஸ்வாமிஸ்வரூபகதநபூர்வகமாக - ஆத்மஸ்வரூபலக்ஷணமான ஜ்ஞாத்ருத்வத்தை முந்துறச்சொல்லி யென்றபடி ப்ரணவத்தில் ஜீவஸ்வரூபம் முக்கியமாகையாலே, முதலில் மகாரத்தைவைத்து அதன்பிறகு எம்பெருமானுக்கு ஶேஷபூதனென்பதைத் தெரிவிப்பதாய்ச் சதுர்த்திவிபக்தி மறையப்பெற்றதான அகாரம் வைக்கப்படவேண்டாவோ? என்று தோன்றுகிற ஶங்கையை இங்கு அநுவதிக்கிறாரென்று அறிக.

திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்திப்படியே, ஜீவபரர்களுக்கு உண்டான சேஷசேஷிபாவஸம்பந்தத்தைச் சொல்லிற்றென்கை.

இன்னும் பொய்கையாருடைய திவ்யஸூக்தியாலே 'சேஷத்வ ப்ரதிஸம்பந்தி ஒருமிதுநம்' என்னுமிடந் தோற்ற, இந்தஜீவபர ஸம்பந்தத்தை அருளிச்செய்கிறார்.

**மூ-(௭௩) இத்தால், *"தாமரையாள் கேள்வ னொருவனையே நோக்கு முணர்வு" என்றதாயிற்று.**

(வ்யா) 'இத்தால் *"தாமரையாள் கேள்வன்"' என்று தொடங்கி. அதாவது - இப்ரணவத்தால், "தாமரையாள் கேள்வன்" என்று-அகாரவாச்யனை சேஷத்வ ப்ரதிஸம்பந்தியான ஸ்ரிய:பதியையும், 'ஒருவனையே நோக்கும்' என்று-சதுர்த்யுகாரங்களாற் சொல்லுகிற அநந்யார்ஹசேஷத்வப்ரயுக்தமான ஆத்மாவினுடைய 1 ததேகபரத்தையும், 'உணர்வு' என்று - அந்த சேஷத்வ ஆச்ரயமாக மகாரத்தாற் சொல்லப்பட்ட ஜ்ஞாநைகநிரூபணீயனான ஆத்மாவையும் சொல்லுகிற ஸூக்தியிற்படியே, 2 ஜீவபரஸம்பந்தம் சொல்லிற்றாயிற்றென்கை.

அகாரத்தில் ப்ரத்யயார்த்த ப்ரதாநமாகப் ப்ரணவார்த்தங்களை யோஜித்தார் கீழ்; அதில் தாத்வர்த்தப்ரதாநமாகப் ப்ரணவத்துக்கு இன்னும் ஒருயோஜனை அருளிச்செய்கிறார்.

**மூ-(௭௪) அகாரத்தாலும் மகாரத்தாலும், ரக்ஷகனையும் ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்தியாலும் உகாரத்தாலும், ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும் பலத்தையும் சொல்லிற்று.**

(வ்யா) 'அகாரத்தாலும்' என்று தொடங்கி. அதாவது-அகாரத்தாலே ரக்ஷகனை ஈச்வரனைச் சொல்லிற்று; மகாரத்தாலே தத்ரக்ஷ்யமான ஆத்மவஸ்துவைச் சொல்லிற்று; சதுர்த்தியாலே ரக்ஷி

---

1 ததேகபரத்வ-அந்த ஸ்ரிய:பதியொருவனிடத்தில் தானே மனம் பற்றி யிருக்கை. 2 ஜீவபரஸம்பந்தம் - ஜீவாத்ம பரமாத்மாக்களுக்குப் பந்தமாக உள்ள ஸம்பந்தம் என்றபடி.

கைக்கு ஹேதுவான சேஷத்வமாகிற 1 ப்ராப்தியைச் சொல்லிற்று, இப்படி ரக்ஷிக்கிறதற்கு பலம் - இவ்வாத்மவஸ்து அத்தலைக்கு அநந்யார்ஹமாக 2 விநியோகப்படுகை யாகையாலே, அவ்வநந்யார்ஹ சேஷத்வ வாசியான உகாரத்தாலே ரக்ஷணபலத்தைச் சொல்லிற்றெனகை

ஆக, இம்மந்த்ரத்தில் ப்ரதமபதமான ப்ரணவார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று

இனி மேலிற்பதங்களுக்கும் அர்த்தம் அருளிச்செய்வதாக, 3 மந்த்ரசேஷமும் 4 இதுக்கு விவரணமாயிருக்கும்படியை முந்துற அருளிச்செய்கிறார்

சூ-(எரு) இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது

(வ்யா) 'இனிமேல் ப்ரணவத்தைவிவரிக்கிறது' என்று "இவ்விடத்தில் விவரணமாகிறது - ப்ரஸ்துதமான அர்த்தத்துக்கு உபயுக்தமான அர்த்தத்தைச் சொல்லிக்கொண்டு பூர்வோக்தமான அர்த்தத்தை விஶதீகரிக்கை" என்று தீபப்ரகாஶத்திலும், (அஎ) "உக்தார்த்த-விஶதீகார யுக்தார்த்தாந்தரபோதநம் । மதம் விவரணம் தத்ர மஹிதாநாம் மநீஷிணாம்" [உக்தார்த்த விஶதீகார யுக்தார்த்தாந்தர போதநம் । மதம் விவரணம் தத்ர மஹிதாநாம் மநீஷிணாம்] என்று ரஹஸ்யத்ரயார்த்தவிவரணக்ரமம் அருளிச்செய்த ப்ரபந்தத்திலும், விவரணலக்ஷணத்தைச் சீயர் அருளிச் செய்தாரிறே

'விவரிக்கிறபடிதான் எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார்

**சூ -(எசு) உகாரத்தை விவரிக்கிறது - நமஸ்ஸு, அகாரத்தை விவரிக்கிறது - நாராயணபதம், மகாரத்தை விவரிக்கிறது-சதுர்த்தி, நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள்.**

(வ்யா) 'உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு' என்று தொடங்கி அதாவது-அநந்யசேஷத்வத்தைக் கழிக்கிற இடத்தில் அநயரி

1 ப்ராப்தி-ஸம்பந்தமென்னலாம் 2 விநியோகப்படுகை-உபயோகப்படுகை 3 மந்த்ரசேஷம் - மந்த்ரத்தின் மிச்சமான பாகம் நமஸ்ஸும் நாராயணபதமும் 4 இதுக்கு-ப்ரணவத்துக்கு

லே அநந்யார்ஹனாக்கச் சொல்லப்பட்ட 1 தன்னை வெளியாக்கச் சொல்லிக் கழிக்கையாலே உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு; ரக்ஷகனான ஈச்வரனுடைய ஸ்வரூபத்தையும் ரக்ஷ்யபூதசேதநாசேதநங்களையும் ரக்ஷணோபயோகியான குணங்களையும் ரக்ஷணப்ரகாரத்தையும் விசதமாகச் சொல்லுகையாலே, அகாரத்தை விவரிக்கிறது நாராயணபதம், (அஅ) "நாகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வம்" [நாகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வம்] (அக) "அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:" [அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:] என்கிறபடியே 2 கிஞ்சித்காரமில்லாதபோது ஶேஷத்வஸித்தியில்லாமையால், தத்ஸித்திக்கு உறுப்பான கிஞ்சித்காரத்தைப் ப்ரதிபாதிக்கிற சதுர்த்தி, ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மவஸ்துவைச் சொல்லுகிற மகாரத்தை விவரிக்கிறது; மகாரவாச்யனான ஆத்மாவினுடைய நித்யத்வம், ஏகரூபத்வம், பஹுத்வம் தொடக்கமானவற்றைப் ப்ரதிபாதிக்கையாலே, மகாரத்தை விவரிக்கிறது நாரபதமென்று சொல்லுவார்கள் என்கை.

'அக்ஷரத்ரயத்திலே விவரியாதே 3 வ்யுத்க்ரமமாக விவரிப்பானேன்?' என்ன, அருளிச்செய்கிறார்

**ஸூ-(எஎ) அடைவே விவரியாதொழிகிறது, விரோதி போய் அநுபவிக்கவேண்டுகையாலே**

(வ்யா) 'அடைவே' என்று தொடங்கி. அதாவது- அக்ஷரத்ரயத்திலே விவரியாதொழிகிறது - அகாரவிவரணமான நாராயணபதத்திலே பகவதநுபவத்துக்கு விரோதியான அஹங்கார மமகாராதிகள் நமஸ்ஸாலே கழிந்துபோய்ப் பின்னை அநுபவிக்கவேண்டுகையாலே யென்கை.

இனி மத்யமபதமான நமஸ்ஸுக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக, அதில் 4 அவாந்தரபதபேதத்தை அருளிச்செய்கிறார்

**ஸூ-(எஅ) நமஸ்ஸு - "ந" என்றும் "ம:" என்றும் இரண்டு பதம்**

1 நமஸ்ஸு 'ம-ந' என்று பிரிந்து 'எனக்கு உரியனல்லேன்' என்று ஸ்வஶேஷத்வத்தை வெளிப்படையாகக் கழித்தல் காண்க. 2 கிஞ்சித்காரம்- ஏதேனும் குற்றேவல் செய்கை 3 வ்யுத்க்ரமம் - படியாய் இருக்கின்ற வரிசைக்கு மாறான முறைமை 4 அவாந்தரபதபேதம்- நமஸ்ஸிலுள்ள உள்ள பதப் பிரிவு

(வ்யா) 'நமஸ்ஸு - "ந" என்றும் "ம" என்றும் இரண்டு பதம்' என்று

'இவ்விரண்டுபதங்களுக்கும் அர்த்தம் ஏது?' என்ன, அருளிச் செய்கிறார்

**மூ-(எகூ) "மஃ" என்கிற இத்தால், 'தனக்கு உரியன்' என்கிறது, "ந" என்று அத்தைத் தவிர்க்கிறது**

(வ்யா) 'ம என்கிற இத்தால்' என்று தொடங்கி அதாவது - "மஃ" என்று ஷஷ்ட்யந்தமான இம்மகாரத்தால் மகாரவாச்யனான ஆத்மாவுக்கு 1 கீழ்ச்சொன்ன தாதர்த்யப்ரதிகோடியான ஸ்வார்த்தத்வம் தோற்றுகையாலே, 'தனக்கு உரியன்' என்னுமதைச் சொல்லுகிறது, "ந" என்று 2 நிஷேதவாசியான நஞ்ஞாலே, அத்தைக் கழிக்கிறது என்கை

உபயபதத்தாலும் சொன்ன அர்த்தத்தைச் சேர்ப்பிடித்து அருளிச்செய்கிறார்

**மூ-(அ௦) ஆக "நமஃ" என்கிற இத்தால், 'தனக்கு உரியனன்று' என்கிறது**

(வ்யா) 'ஆக நம என்கிற இத்தால் தனக்கு உரியன் அன்றென்கிறது' என்று பதக்ரமத்திலே அர்த்தஞ்சொல்லாதே, வ்யுத்க்ரமமாகச் சொல்லுகிறது 3 நிஷேத்யத்தைச்சொல்லி நிஷேதிக்க வேண்டுகையாலே, 4 க்ரமத்திலே சொல்லும்போது "*வீடுமின் முற்றவும்" என்னுமாபோலே நிஷேதபூர்வகமாக நிஷேத்யத்தைச் சொல்லுகிறதென்று யோஜிக்கவேணும் அதுதானும் பரந்தபடியிலே இவர் தாமே அருளிச்செய்தார்

'தனக்கும் பிறர்க்கும் உரித்தன்று' என்று அந்யசேஷத்வத்தை நிஷேதித்த உகாரத்தைவிவரிக்கிறதாகில்,பிறர்க்கு உரித்தன்றென்றத

---

1 கீழ்ச்சொன்ன தாதர்த்ய-அகாரத்தால் லோபித்துள்ள சதுர்த்தியின் அர்த்தமான தாதர்த்யம், தாதர்த்யப்ரதிகோடி-ஸ்வார்த்தமாக [பகவதர்த்தமாக] இருக்கை யென்பதற்கு எதிர்த்தட்டானது 2 நிஷேதவாசி - எதிர்மறைப் பொருளைச் சொல்லுவது 3 நிஷேத்யம் - நிஷேதிக்கப்பட வேண்டியது 4 பதக்ரமத்திலே சொல்லியுள்ள இடத்திற்கு உபபத்தி அருளிச்செய்வது, 'க்ரமத்திலே' என்று தொடங்கும் வாக்யம்

* திரு-வா-மொ-க-உ-க

த்தையும் விவரியாமல், 'தனக்குரியனன்று' என்று இத்தையே விவரிப்பானேன்? என்கிற சங்கையிலே அருளிச்செய்கிறார்

**ஸூ-(அசு) 1 பிறர்க்கு உரியனான அன்று தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி மீட்கலாம், தனக்கென்னுமன்று யோக்யதையும் கூட அழியும்**

(வ்யா) 'பிறர்க்கு உரியனானவன்று' என்று தொடங்கி. அதாவது-அந்யசேஷபூதனான அன்று, சேஷத்வத்துக்கு இசைகையாலே, அந்யபரிக்ரஹதசையில் தனக்குண்டான ஸர்வகாரணத்வ ஸர்வரக்ஷகத்வ ஸர்வசேஷித்வாதியான வைலக்ஷண்யத்தைக் காட்டி அந்நிலையிலநின்றும் மீட்கலாம். 'தனக்குரியன்' என்று நிற்குமன்று (அசு) "ஸ்வமேவ" [த்வமமே] என்றால், (கூ0) "ஸோऽஹம்" [அஹமமே] என்னுமது ஒழிய சேஷத்வத்துக்கு இசையாமையாலே, மீட்கைக்கு யோக்யதையுங்கூட இல்லையாய்விடும் என்கை

'இந் நமஸ்ஸால் செய்கிற அம்சந்தான் எது?' என்ன, அருளிச்செய்கிறார்

**ஸூ-(அஎ) இத்தால், விரோதியைக் கழிக்கிறது**

(வ்யா) 'இத்தால் விரோதியைக் கழிக்கிறது' என்று

'அதுதான் ஒன்றோ? பலவோ?' என்ன, அருளிச்செய்கிறார்

**ஸூ-(அஅ) விரோதிதான்-மூன்று.**

(வ்யா) 'விரோதிதான் மூன்று' என்று

அம்மூன்றுந்தான் எது? என்ன, அருளிச்செய்கிறார்

**ஸூ-(அகூ) அதாவது-ஸ்வரூபவிரோதியும், உபாயவிரோதியும், ப்ராப்யவிரோதியும்.**

(வ்யா) 'அதாவது-ஸ்வரூபவிரோதியும், உபாயவிரோதியும், ப்ராப்யவிரோதியும்' என்று. இத்தால் ப்ரதமபதத்திற்சொன்ன 2 ஸ்வரூ

1 எம்பெருமானுக்கு சேஷனாகைக்கு யோக்யதையை யுண்டாக்குகிற அந்யசேஷத்வத்தைக் காட்டிலும், எம்பெருமானுக்கு அடிமைப்படுத்தலையும் அழிக்கிற ஸ்வசேஷத்வம் [நான் எனக்கு உரியேன் என்பது] அதிக்ரூரமாகையாலே அத்தைக்கழிக்கிற நமஸ்ஸாலே அந்யசேஷத்வம் தானே கழியுண்டுபோமென்பது, இந்த மூலவாக்யத்தின் கருத்து 2 ஸ்வரூபத்துக்கு - பகவதநந்யார்ஹசேஷத்வ ஸ்வரூபத்துக்கு

பத்துக்கு விரோதியும், 1 இப்பத்தத்தில் ஆர்த்தமாக ஸித்திக்கிற உபாயத்துக்கு விரோதியும், உத்தரபதத்திற்சொல்லுகிற ப்ராப்யத்துக்கு விரோதியும் என்கை. இந்நமஸ்ஸுதான் 2 காகாக்ஷிந்யாயத்தாலே பூர்வோத்தரபதங்களிற் சொல்லுகிற ஸ்வரூப ப்ராப்யங்களினுடைய விரோதிகளைக் கழிக்கக்கடவதாயிறே இருப்பது.

'இவ்விரோதித்ரயமும் கழிகையாவது தான் ஏது?' என்ன, அது தன்னை அடைவே அருளிச்செய்கிறார், மேல் மூன்று வாக்யத்தாலே.

**ஸூ-(௮௫) ஸ்வரூபவிரோதி கழிகையாவது-"*யானே நீ என்னுடைமையும் நீயே" என்றிருக்கை, உபாயவிரோதி கழிகையாவது-"† களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்" என்றிருக்கை, ப்ராப்யவிரோதி கழிகையாவது-"மற்றை நங்காமங்கள் மாற்று" என்றிருக்கை.**

(வ்யா) 'ஸ்வரூபவிரோதி' இத்யாதி. அதாவது-3 ஸ்வரூபத்துக்கு விரோதி "*யானே என்தனதே" என்றிருக்கை யாகையாலே அது கழிகையாவது "*யானே நீ யென்னுடைமையும் நீயே" என்று-4 ஆத்ம ஆத்மீயங்கள் இரண்டும் 5 அத்தலைக்கு ப்ரகாரதயா ஶேஷம் என்றிருக்கை யென்கை. 'உபாயவிரோதி' இத்யாதி. அதாவது-6 உபாயத்துக்கு விரோதி 7 ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமாகையாலே, அது 8 கழிகையாவது-"† களைவாய் துன்பம் களை

---

1 இப்பத்தத்தில் ஆர்த்தமாக ஸித்திக்கிற-இப்பதத்துக்கு ஆர்த்தமான ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தியாகிற நிஷ்பலத்தாலே ஏற்படுகிற 2 காகாக்ஷிந்யாயத்தாலே-காகத்துக்குக் கண்விழி ஒன்றேயிருந்ததேயாயினும் அது தானே இரண்டு கண்களிலும் ஸஞ்சரித்துப் பார்வையையுண்டாக்குவதுபோலே, நடுவில் நிற்கும் நமஸ்ஸு தனக்குப்பூர்வபதமான ப்ரணவத்திலும் உத்தரபதமான நாராயண பதத்திலும் அந்வயிக்கையாலே என்றபடி. 3 ஸ்வரூபத்துக்கு-ஸ்வரூப ஜ்ஞானத்துக்கு 4 ஆத்மஆத்மீயங்கள்-தானும் தன்னுடைமையும் 5. அத்தலைக்குப்ரகாரதயா ஶேஷமென்றிருக்கை-ஈஶ்வரனுக்கு சரீரமாய்க்கொண்டு ஶேஷமென்று கொள்ளுகை 6 உபாயத்துக்கு-உபாயத்வாத்யவஸாயத்துக்கு 7 ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம்-தன்னைக் காத்துக்கொள்வதில் தனக்கு ஸம்பந்த முண்டாகை 8 ம ந-நான் எனக்கன்று [அதாவது-என்னுடைய ரக்ஷணத்தில் உரிமை யுடையவனன்று] என்று பொருள்பட்டு, பகவதேகரக்ஷகனென்ற கருத்தை விளக்குவதாகி, உபாயவிரோதியைக் கழித்தல் காண்க.

* திருவாய்-மொ ௨-௯-௯. † திருவாய்-மொ ௫-௮-௮

யாதொழிவாய களைகண மறறிலேன" என்று - 'துஃகததைப போக்குவாய போககாதொழிவாய, வேறொரு ரக்ஷகவஸதுவையுடையேனலலேன' என்றிருககைகை யெனகை 'பராபபவிரோதி' இதயாதி அதாவது - 1 பராபயததுககு விரோதி ஸ்ம் பாயோஜநபுததியாகையாலே, அது கழிகையாவது-"*மறறைநஙகாமஙகள மாறறு" என்று-'உனனுககபுககுப புறமபான எஙகளுடைய ஆசையைப போககு' என்றிருககை எனகை

இபபடி ஸவரூப உபாய புருஷாாததஙகள மூனறுககும விரோதியாகிறது இவனுடைய அஹஙகார மமகாரஙக ளாகையாலே, 2 அதனுடைய கரௌாயததையும, தநநிவருததியிலுணடான நனமையையும அருளிசசெயகிறா

ஸூ (அ௬) "மஃ" எனகை-ஸவரூபநாஶம, "நம" எனகை - ஸவரூபோஜஜீவநம

(வயா) 'ம எனகை - ஸவரூபநாஶம, 'நம' எனகை - ஸவரூபோஜஜீவநம' என்று அதாவது-(௬௧) "வெதநஸ்ய யதா ஶ்ரீம் ஸஷிந்து ஸிவெவ வஸ்தி । ஶ்ரீ உத்யக்ஷரம் ததா ஶ்ரீஸ்ய வாவகம்" [சேதநஸய யதாமமபம ஸவஸமிந ஸவிீயேச வஸதுநி - மம இதயக்ஷரதவநதவம ததாமமயஸ। வாசகம] எனகிறபடியே, 'ம' எனகிற இதிலே 3 அஹஙகார மமகாரஙகள இரணடுமுணடாகையாலே அதிலே அநவிதனுகை, இவவாதமாவினுடைய ஸவரூபததுககு நாஶம; 'நம' என்று அதில அநவயமறறிருககை, ஸவரூபததுககு உஜஜீவநம எனகை (௬௨) "த்யக்ஷரஸ்து ஹவெத்ம்யு ஸ்யக்ஷரம் ஸுஹணஃவஷ்ம । ஶமெதி த்யக்ஷரொமுத்யுந ஶமெதிவ ஶாஶ்தம்" [தவயக்ஷரஸதுபவேநமருதயுஸ தாயக்ஷரம பருஹமண பதம - மமேதி தவயக்ஷரோ மருதயுா நமமேதிச ஶாஶவதம] எனனசசொலலுகிறதிறே

---

1 பராபயம-புருஷாாததம 2 அதனுடைய-அகஙகாரமமகாரஙகளினுடைய 3 'உடையது' எனற பொருளைக காடடுகிற மமதையிலும அஹஙகாரமமகாரஙகள வருவது காணக

* திருபபாவை-உ௯

இப்படி ஸ்வரூப உபாய புருஷார்த்த விரோதிகளைக் கழிக்கிற அளவன்றிக்கே இந்நமஸ்ஸு தான் ஸ்வரூபாதித்ரயத்தையும் ப்ரகாசிப்பிக்கும் என்கிறார்.

**சூ (அஎ) இதுதான் - ஸ்வரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையும் காட்டும்.**

(வ்யா) 'இதுதான் 1 ஸ்வரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையும் காட்டும்' என்று

இதுதன்னை உபபாதிக்கிறார், மேல் மூன்று வாக்யத்தாலே —

**சூ-(அஅ) "* தொலைவில்லிமங்கலந் தொழும்" என்கையாலே, ஸ்வரூபம் சொல்லிற்று "† வேங்கடத்து உறைவார்க்கு நம" என்கையாலே, உபாயம் சொல்லிற்று, ‡ "அந்தி தொழுஞ் சொல்" என்கையாலே, பலம் சொல்லிற்று**

(வ்யா) "தொலைவில்லிமங்கலம்" இத்யாதி அதாவது - "* தொலைவில்லிமங்கலந்தொழும்" என்று, அவன் உகந்தருளின நிலத்தளவும் செல்ல சேஷமாயிருக்கும்படியைச் சொல்லுகிறவளவில், "தொழும்" என்று நமஸ்காரத்தைச் சொல்லுகையாலே, ஸ்வரூபம் சொல்லிற்று என்கை 'வேங்கடத்து' இத்யாதி அதாவது - † "வேங்கடத்துறைவார்க்கு நம" என்று - 'திருவேங்கடமுடையானுக்கு சேஷம் நான், எனக்குரியேனல்லேன்' என்று ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத ஸ்வரூபபாரதந்த்ர்யத்தைச் சொல்லுகையாலே, அவனே உபாயமென்னுமிடம் ஸித்திக்கையாலே, 'உபாயம் சொல்லிற்று' என்கை † 'அந்திதொழுஞ்சொல்' இத்யாதி அதாவது - ‡ "அந்திதொழுஞ் சொல்" என்று தாஸ்யரஸம் அபிமத

1 ஸ்வசேஷத்வம் சேஷபகவதநந்யார்ஹசேஷத்வமப்ரகாசிப்பது இந்நமஸ்ஸிலேயாகையாலே இது, ஸ்வரூபத்தைக்காட்டும், ஈச்வரனைக்கையே பார்த்திருக்கையாகிற பாரதந்த்ர்யம் விதித்தது அவனே உபாயமென்பது தெளிவாவது-ஸ்வரக்ஷணே ஸ்வாதந்த்ர்யம் நிவர்த்தித்தபின்பே ஆகிலால் அதனைத்தெரிவிக்கும் இது, உபாயத்தையுங்காட்டும், ஈச்வரவிஷயத்திற்செய்யும் கைங்கர்யத்தில் ஸ்வபோக்யதாபுத்தி கழிந்தாலல்லது ஈச்வரனுடைய திருவுள்ளத்துக்கு உகப்பானது என்ற கருத்தோடு செய்யப்படவேண்டிய கைங்கர்யரூபபலஞ் சித்தியாமையாலே, ஸ்வபோக்யதா நிவ்ருத்தியைக் காட்டுகிற இது, பலத்தையும் காட்டும்

* திருவா ௬-௫-௧ † திருவா ௩-௩-௬. ‡ திருவா. ௧௦-அஎ

தால் அதனுடைய சரமகலையிலே சொல்லக்கடவ "தொழுது சொல்" என்று நமஸ்ஸப்தத்தைச் சொல்லுகையாலே, பலம் சொல்லிற்று என்கை.

இப்பதத்திலே, ததீயசேஷத்வமும் ஆர்த்தமாக அநுஸந்தேயமாகையாலே, அத்தை அருளிச்செய்கிறார்.

**ஸூ-(அகூ) "† உற்றதும் உன்னடியார்க்கடிமை" என்கிறபடியே, இதிலே பாகவதசேஷத்வமும் அநுஸந்தேயம்.**

(வ்யா) 'உற்றதும்' என்று தொடங்கி. அதாவது - "† நின் திரு வெட்டெழுத்தும் கற்று நானுற்றதும் உன்னடியார்க்கு அடிமை" என்று - திருமந்த்ரம் கற்றதால் நானுற்றதும் உன்னடியார்க்கு அடிமை என்னும் இவ்வர்த்தத்திலே' என்கிறபடியே, அஹங்கார மமகாரங்கள் நிவ்ருத்தமாப் பகவச்சேஷத்வம் உள்ளபடி ப்ரகாசிக்கிற இந்நமஸ்ஸிலே, தத்காஷ்டையான பாகவதசேஷத்வமும் அநுஸந்திக்கவேணு மென்கை.

இப்படி ஆர்த்தமாக அநுஸந்திக்கப்படும் பாகவதசேஷத்வந்தான், இந்நமஸ்ஸிலன்றிக்கே ஸ்தலாந்தரங்களிலே சொல்லுவாருமுண்டாகையாலே, அத்தை அருளிச்செய்கிறார்.

**ஸூ-(கூ0) இது - அகாரத்திலே என்றுஞ் சொல்லுவார்கள்; உகாரத்திலே யென்றுஞ் சொல்லுவார்கள்.**

(வ்யா) 'இது அகாரத்திலே என்றுஞ் சொல்லுவார்கள், உகாரத்திலே என்றுஞ் சொல்லுவார்கள்' என்று. அதாவது - சதுர்த்தியாலே ஆத்மாவினுடைய பகவச்சேஷத்வத்தைச் சொல்லுகையாலே, பகவச்சேஷத்வகாஷ்டையான இந்தப்பாகவதசேஷத்வாநுஸந்தாநம் அகாரத்திலே யென்றும் சிலர் சொல்லுவார்கள். அநந்யார்ஹசேஷத்வத்துக்கு எல்லை ததீயசேஷத்வபர்யந்தமாக நிற்கையாகையாலே, அநந்யார்ஹத்வப்ரதிபாதகமான உகாரத்திலே யென்றும் சிலர் சொல்லுவார்களென்கை. 1 ஆர்த்தமாகையாலே, அவ்வவஸ்தலங்களிலும் சொல்லலாயிருந்ததேயாகிலும், 2 கந்தல்கழிந்தவிடத்திலே சொல்லுகையே உசிதம் என்று கருத்து.

---

பெரிய தி-மொ-அ-கூ0-ங. * என்கையாலே என்று சில ஸ்ரீகோசங்கள்.

1 ஆர்த்தமாகையாலே-அர்த்தபலத்தாலே கொள்ளும் தாகையாலே

2 கந்தல்-அஹங்கார மமகாரங்கள்

(வ்யா) 'சேதநனுக்கு' என்று தொடங்கி அதாவது- இப்படி இவள் இருந்த நோக்குகையாலே, சேதநனுக்கு, ஈஶ்வரஸ்வா தந்த்ரயமும் ஸ்வாபராதமும் ஆகிற இவை இரண்டையும் நினைத்து 'என்னுடைய விளையப்புகுகிறதோ' என்று அஞ்சவேண்டா என்கை

இனி, இம்மிதுனத்தின் தாதபாயாஶ்ரயத்தை அருளிச் செய்கிறார்

ஸூ—(கூசு) இத்தால - ஆஶ்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது, காலம் பார்க்கவேண்டா என்கிறது

(வ்யா) 'இத்தால்' என்று தொடங்கி அதாவது - இப்படி 1 புருஷகார உபாய வஸ்துக்களினுடைய நித்யயோகத்தைப் பரதிபாதிக்கிற இம்மிதுனபரால், இவ்விஷயத்தை யாஶ்ரயிப்பார்க்கு, ஆஶ்ரயிக்கையில் ருசியே வேண்டுவது, 'இரண்டுதலையும் கூடியிருக்கும் தசையிலே ஆஶ்ரயிக்கவேணுமே' என்று, ஆஶ்ரயணத்துக்குக் காலம் பார்த்திருக்கவேண்டா வென்கிற தென்கை.

இனி, இவள் புருஷகாரத்வத்தின் அவஶ்யாபேக்ஷிதத்வத்தை அறிவிக்கைக்காக, இவள் ஸந்நிதிக்கும் அஸந்நிதிக்கும் உண்டான வாசியை அருளிச்செய்கிறார்

ஸூ—(கூரு) இவள் ஸந்நிதியாலே காகம் தலை பெற்றது, அது இல்லாமையாலே ராவணன் முடிந்தான்

(வ்யா) 'இவள் ஸந்நிதியாலே' என்று தொடங்கி (கககூ) "தெவ்யா காருண்யரூபயா" [தேவ்யா காருண்யரூபயா] என்கிறபடியே, 2 கருணைதான் ஒருவடிவு கொண்டாற்போலே இருப்பாளாய், ஸ்வதந்த்ரனை ஈஶ்வரனுக்கும் ஸ்வாதந்த்ரயத்தை யழுக்கிக் கருணையைக் கிளப்புமவளான இவள் ஸந்நிதியாலே,

1 புருஷகாரவஸ்து - பிராட்டி, உபாயவஸ்து - ஈஶ்வரன் 2 காருண்யம்-ஏவ-ரூபம் யஸ்யாஸ்ஸா-காருண்யரூபா என்றும் காருண்யம் ரூபயதி இதி - 'காருண்யரூபா' என்றும், 'காருண்ய-ரூபா' என்பதற்கு இரண்டு ஸமாஸம் உண்டு அதன்மேல் த்ருதீயாவிபக்திசேர்ந்து காருண்யரூபயா என்று ஆயிற்று முதல் ஸமாஸத்துக்குப் பொருள் - காருண்யமே ஆகாரமானவள் என்பது அதை கருணைதான் ஒரு வடிவுகொண்டாற்போலே இருப்பாளாய் என்று விவரிக்கிறார் இரண்டாவது ஸமாஸத்தின் பொருள் - காருண்யத்தைக் கிளப்புபவள் என்பது

அபராதத்தைத் தீரக்கழியச் செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு இலக்காய்த் தலையறுப்புண்ணத் தேடின காகம் (௧௨) "க்ருபயா பர்யபாலயத்" [க்ருபயா பர்யபாலயத்] என்கிறபடியே, க்ருபாவிஷயமாய்த் தலைபெற்றுப் போயிற்று, அப்படியிருக்கிற இவள் ஸந்நிதி இல்லாமையாலே போக்கற்றுச் செயல் மாண்டு நின்ற நிலை ஒக்கிருக்கச் செய்தேயும், காகத்தோபாதி அபராதமு மின்றிக்கே யிருக்க, ராமஸ்த்ரத்துக்கு இலக்காய ராவணன் முடிந்துபோனான் என்கை. ஆகையால், ஆஶ்ரயிப்பார்க்கு இவள் ஸந்நிதியே வேணுமென்று கருத்து.

ஆக, ஸ்ரீமத்பதார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம், நாராயணபதார்த்தத்தை அருளிச்செய்கிறார்

**மூ—(௧௩௬) புருஷகாரபலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம்.**

(வ்யா) 'புருஷகாரபலத்தாலே' என்று தொடங்கி. அதாவது — 1 உபதேஶத்தாலும் அழகாலும் கண்ணழிவற வசீகரித்துக் காரியங்கொள்ளவல்ல 2 புருஷகார பலத்தாலே 3 ஆஶ்ரயணோந்முகனான சேதநன் அநாதிகாலம் பண்ணின அபராதங்களைப் பார்த்துச் சீறி "அங்கீகரியேன்" என்று இருக்கும் ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யம் தலைமடிந்தால் 4 அதன்கீழ் தலையெடுக்கப் பெறாத 5 செறிப்புத் தீர்ந்து தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம் என்கை.

'அவைதாம் எவை?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ—(௧௩௭) அவையாவன-வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும், ஸௌஶீல்யமும், ஸௌலப்யமும், ஜ்ஞாநமும், ஶக்தியும்**

---

1 உபதேஶத்தாலே வசீகரிக்கும் வகையை 127-ஆவது சூர்ணையின் வ்யாக்யானத்திற் காணலாம் 2 புருஷகார பலத்தாலே (லக்ஷ்மியின் புருஷகாரம்) தனக்கு ஏற்பட்ட உறுதியினாலென்றபடி 3 ஆஶ்ரயணோந்முகனான ஈச்வரனை ஶரணமாக அடைவதில் ஸம்மதித்துப்போன 4. அதன்கீழ் ஈஶ்வரன் ஸ்வாதந்த்ர்யத்தைக் கைக்கொண்டபோது என்றபடி- 5 செறிப்பு - ஸங்கோசம்

(வ்யா) 'அவையாவன' என்று தொடங்கி இவற்றில், 'வாத்ஸல்யம்' ஆவது - வத்ஸத்தின்பக்கல் தேநு இருக்கும் இருப்பு, அதாவது-அதனுடைய தோஷத்தைப் போக்யமாகக் கொள்ளுகையும், க்ஷீரத்தைக்கொடுத்து வளர்க்கையும், எதிரிட்டவரைக் கொம்பிலும் குளம்பிலும் கொண்டு நோக்குகையுமிறே, அப்படியே, ஈஶ்வரனும் தோஷத்தைப் போக்யமாகக்கொண்டு, * "பாலேபோற் சீர்" என்கிற குணங்களாலே தழைப்பித்து, (கஉக) "[illegible] ஜேயம்" [கதஞ்சந - நத்யஜேயம்] என்றும், (கஉஉ) "[illegible]" [அப்யம் ஸர்வபூதேப்ய] என்றும் சொல்லுகிறபடியே அநுகூல நிமித்தமாகவும் ப்ரதிகூல நிமித்தமாகவும் நோக்கும் 'ஸ்வாமித்வம்' ஆவது - இவன் 1 விமுகனான தஶையிலும் விடாதே நின்று, ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகைக்கு ஹேதுவான ஒருபந்தவிஶேஷம், அதாகிறது - உடையவனாயிருக்குமிருப்பு, 2 அத்வேஷம்தொடங்கிக் கைங்கர்ய பர்யந்தமாக உண்டான ஸ்வபாவ விஶேஷங்களையெல்லாம் உண்டாக்குகிறது இந்த பந்தவிஶேஷமடியாக 'ஸௌஶீல்யம்' ஆவது - 3 உபயவிபூதியோகத்தாலும், பெரிய பிராட்டியாரோடேச் சேர்த்தியாலும், நிரங்குஶமா யிருக்கிற ஈஶ்வரனுடைய மேன்மையையும் தங்கள் சிறுமையையும் பார்த்து † "அவனெவ்விடத்தான் யானார்" என்று 4 பிறகாலியாதபடி எல்லாரோடும் ஒக்க மேல்விழுந்து 5 புரையறக் கலக்கையும், அது தன்பேறாக இருக்கையும், எதிர்த்தலையில் அபேக்ஷையன்றியிலே இருக்கக் கலக்கையும் 'ஸௌலப்யம்' ஆவது - கண்ணுக்கு விஷயமின்றிக்கேயிருக்கிற தான் கண்ணாலே கண்டு ஆஶ்ரயிக்கலாம்படி எளியனாயிருக்கை 'ஜ்ஞாநம்' ஆவது - இச்சேதநனுக்குக் கழிக்கவேண்டும் அநிஷ்டங்களையும் கொடுக்கவேண்டும் இஷ்டங்களையும் நேராக அறிகைக்கு 6 ஈடான 7 ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தபதார்த்தங்களையும் ஒரு

---

1 விமுகன் - பராமுகன் 2 அத்வேஷம் முதலியவை - அத்வேஷம் ஆபிமுக்யம், மோக்ஷேச்சை வைராக்ய ப்ராப்தி ஸதாசார்யஸமாஶ்ரயணம் ஸம்யக் ஜ்ஞாநம் ஶரீராஹந்தை உசிதஉபாயபரிக்ரஹம் ஸமாசாரம் உத்தரணம் பரமபதப்ராப்தி நிரந்தரபகவத்கைங்கர்யம் என்பன 3 உபயவிபூதி யோகம் - நித்யவிபூதி லீலாவிபூதி என்பவற்றில் தனக்குஉள்ள ஸ்வாமித்வமாகிற ஸம்பந்தம் 4 பிறகாலித்தல் - பின்வாங்குதல் 5 புரையற வேறுபாடு தோற்றாமல், ஸ்வோத்கர்ஷமும் பரநிகர்ஷமும் தோற்றாதபடி என்றபடி. 6 ஈடு ஆன - ஏற்றதான 7 ஸ்வவ்யதிரிக்தம் - தன்னிலும் வேறாகிய

* பெரிய திருவந் - ருஅ. † திருவாய் - ரு, க, எ

காலே 1 அபரோக்ஷிககவலல அறிவு 'ஶகதி' ஆவது - 2 ஹேய
ரான நிதயஸமஸாரிகளை 3 உபாதேயதமரான நிதயஸூரிகளோடு
4 ஒருகோவையாககவலல 5 அகடிதகடநாஸாமாதயம. இவ்வறில
வாதஸலயாதிகள நாலும 6 ஆஶ்ரயண ஸௌகர்யாபாதகம, ஜ்ஞா
நாதிகள இரணடும 7 ஆஶ்ரிதகாயாபாதகம, * "நிகரிலபுகழாய"
என்று தொடஙகி 8 வாதஸலயாதிகள நாலையுமிறே, ஆஶ்ரயணத்து
ககு உடலாக ஆழவார அருளிசசெயதது ஜ்ஞானஶகதிகள இரண
டுஞ சொனனது, 9 பராபதி 10 பூரததிகளுககும உபலக்ஷணம, காரய
காதவததுககு அவையும அபேக்ஷிதஙக ளாகையாலே

'இககுணஙகளுககு இவவிடத்தில 11 விநியோகஙகள எவை?'
என்ன, அருளிசசெயகிறார

**மூ—(கங-அ) குறறங்கணடு வெருவாமைககு வாத்ஸலயம்; காரயஞசெயயுமென்று துணிகைககு ஸவாமித்வம், ஸவாமிதவங்கணடு அகலாமைககு ஸௌஶீலயம், கணடு பறறுகைககு ஸௌலபயம, விரோதியைப போககித தனனைக கொடுக்கைககு ஜ்ஞானஶகதிகள**

(வயா) 'குறறஙகணடு' என்று தொடஙகி அதாவது - 12 ஆஶ்ர
யணோநமுகனான இசசேதனன், தனதோஷததைப பாரதது அஞசா
மைககு உறுப்பு, தோஷததைப போகயமாகக கொளளும வாதஸலயம

1 அபரோக்ஷிககவலல - பரதயக்ஷமாகக காணததகக 2 ஹேயர் - சோதது தககொளளத தகாதவர் 3 உபாதேயதமர் - ஏறறுககொளளுதறகு மிகவும ஏறறவர் மிகவும் உயரநதவரென்றபடி 4 ஒரு கோவை - ஒரு வரிசை 5 அகடிதகடநா ஸாமாதயம - ஒனறுசேராதவறறைச சேர்ககுந தனமை 6 ஆஶ்ரயணஸௌகாய் ஆபாதகம - ஆஶ்ரயிபபதறகு ஸௌகாயததைச செயயககூடியவை 7 ஆஶ்ரித காரய ஆபாதகம - அடைநதவர் காரியததைச செயயககூடியவை 8 'நிகரில புகழாய' எனபதனால வாதஸலயமும, 'உலகம் மூனறுடையாய' எனபதனால ஸவாமிதவமும, 'எனனை யாளவனே' எனபதனால ஸௌஶீலயமும, 'நிகரிலமரா திருவேஙகடததானே' எனபதனால ஸௌலபயமும கூறபபட்டுளளன 9 பராபதி - ஸமபநதம 10 பூரததி - எல்லாவறறாலும பூரணனாயிருககுந தனமை 11 விநியோகம - உபயோகம 12. ஆஶ்ரயண உநமுகன - (எமபெருமானை) ஆஶ்ரயிபபதில அநுகூலமுக மானவன

* திருவாய, க-கO-கO

யம. 'நங்காயம செய்யுமோ, செயயாதோ' என்று ஶங்கியாதே காரியஞ்செய்யுமென்று விஶ்வஸிக்கைக்கு உறுப்பு, 1 இழவு பேறு தன்னதாம்படியான ஸ்வாமித்வம் உபயவிபூதிக்கும் 2 கடவனாயிருக்கும் பெருமைக்கு ப்ரகாஶகமான ஸ்வாமித்வத்தைக் கண்டு 3 ஸ்வநிகாஷ்டாநு ஸந்தாநத்தாலே அகலாமைக்கு உறுப்பு, தாழ்ந்தவர்களோடே புரையறக் கலக்கும் ஸ்வபாவமான ஸௌஶீல்யம் 4 அதீந்த்ரியன் என்று பிற்காலியாமல் கண்ணாலே கண்டு ஆஶ்ரயிக்கைக்கு உறுப்பு, தன்வடிவைச் சக்ஷுர்விஷயமாக்குகை யாகிற ஸௌலப்யம், (சஉக) "ஸர்வதாவெஹ்ரோக்ஷ்யிஷாமி" [ஸாவடா பேபயோர்யாக்ஷ்யிஷாமி] என்கிறபடியே 5 ப்ராப்திவிரோதியைப் போக்கிப் ப்ராப்யனான தன்னை உபகரிக்கைக்கு உறுப்பு, 6 ப்ராப்தாவான இவன் கீழ்நின்ற நிலையும், மேல் 7 போக்கடியும் அறிகைக்கும் அறிந்தபடியே செய்து தலைக்கட்டுகைக்கும் 8 ஏகாந்தங்களான ஜ்ஞாநஶக்திகள் என்கை

9 ஸௌகர்யாபாதகங்களான குண சதுஷ்கத்திலும் ஸௌலப்யம் ப்ரதாநமாகையாலே, அந்த ஸௌலப்ய 10 காஷ்டையை அருளிச் செய்கிறார்

## ஸூ—(கங்க). இங்குச்சொன்ன ஸௌலப்யத்துக்கு எல்லைநிலம் அர்ச்சாவதாரம்.

(வ்யா) 'இங்குச் சொன்ன' என்று தொடங்கி அதாவது-11 இப்பதத்தில் ஆஶ்ரயணஉபயோகியாகச் சொன்ன ஸௌலப்யத்துக்கு 12 ஸீமாபூமி *"தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே" என்கிற

1 இழவு பேறு - நஷ்டமும் லாபமும் 2 கடவன் - உரியவன் 3 ஸ்வநிகாஷ்ட அநுஸந்தாநம் - தனது தாழ்ச்சியை யெண்ணுதல் 4 அதீந்த்ரியன் - இந்திரிய ஞானத்துக்கு விஷயமாகாதவன் 5 ப்ராப்திவிரோதி - (எம்பெருமானை) அடைவதற்குத் தடையாவது 6 ப்ராப்தாவான இவன்- (ஈஶ்வரனை தன்னை) அடைபவனான இந்தச்சேதநன் 7 போக்கடி - அடையுந் தேசம் 8 ஏகாந்தங்களான - அவஶ்யாபேக்ஷிதங்களான 9. ஸௌகர்யாபாதகம் - ஆஶ்ரயண ஸௌகர்யாபாதகம் 10 காஷ்டை - எல்லை 11. இப்பதத்தில் - பூர்வகண்டத்திலுள்ள நாராயண பதத்தில் 12 ஸீமாபூமி- எல்லையான இடம்

* முதல் திருவந்தாதி-சச

படியே ஆஸ்ரிதர் உகந்தது ஒன்றைத் திருமேனியாகக்கொண்டு ஸந்-
1 ஸந்நிதி பண்ணியிருக்கும் அர்ச்சாவதாரமென்கை.

இதுதன்னை உபபாதிக்கிறார்

சூ—(கசஂ0) இதுதான் பர வ்யூஹ விபவங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படி இருக்கும்

(வ்யா) 'இதுதான்' என்று தொடங்கி. அதாவது-இவ்வர்ச்-சாவதாரந்தான் 2 தேஸவிப்ரக்ருஷ்டதையாலே கண்ணுக்கு விஷயமாகாத பரவ்யூஹங்களும், 3 காலவிப்ரக்ருஷ்டதையாலே கண்ணுக்கு விஷயமாகாதபடி போன 4 விபவமும் போலன்றிக்கே, 5 ஆஸந்-நமாய் 6 அநவரதஸந்நிதி பண்ணிக்கொண்டிருக்கையாலே, அநவரதம் கண்ணாலே காணலாம்படி இருக்குமென்கை.

'இக்குணங்களெல்லாம் அர்ச்சாவதாரத்திலே காணலாமோ?' என்ன, அருளிச்செய்கிறார்

சூ—(கசக) இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம்

(வ்யா) 'இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம்' என்று அதாவது-ஸௌகர்யாபாதகமாகவும் கார்யாபாதகமாகவும் சொன்ன இக்குணங்கள் எல்லாம், இவை காண்கையிலே அபேக்ஷையுடைய நமக்கு 7 நம்முடைய பெருமாள் பக்கலிலே காணலாமென்கை.

---

1 ஸந்நிதிபண்ணுதல் - சாந்நித்தியமடைதல் 2 தேஸவிப்ரக்ருஷ்டதை - தேஸம் தூரத்திலிருக்கை பரத்வத்தோடு எழுந்தருளியிருக்கும் பரமபதமும், ஸங்கர்ஷண, ப்ரத்யும்ந அநிருத்தாதி ரூபமாகிற திருக்கோலங்கொண்ட வ்யூஹ மூர்த்தத்தோடு எழுந்தருளியிருக்கும் திருப்பாற்கடலும் நாம் இந்தஸரீரத்தோடு போகமுடியாதபடி வெகுதூரத்திலுள்ளனவாதல் காணக 3 கால விப்ரக்ருஷ்டதை - வெகுகாலத்துக்கு முன்னே நிகழ்ந்ததாதல் 4 விபவம் ராமக்ருஷ்ணாதியவதாரங்கள் 5 ஆஸந்நம் - ஸமீபமான இடத்திலிருப்பது 6 அநவரதஸந்நிதி - எப்போதும் நீங்காத ஸாந்நித்யம் 7 நம்பெருமாள் என்றதுக்குத் திருவரங்கம் பெரியகோயிலி லெழுந்தருளியுள்ள நம்பெருமாளைக் காட்டுவதாக வ்யாக்யானஞ் செய்யாமல், நம்முடைய பெருமாள் என்று காரணக்குறி யாக வ்யாக்யானஞ்செய்தது - வெவ்வேறு தேஸங்களிலும் க்ருஹங்களிலும் எழுந்தருளிய அர்ச்சையிலே ஈடுபட்டிருப்பாருக்கும் அங்கங்குக் காணலாமென்று தெரிவிக்கைக்காக

பெருமாள் பக்கலிலே இக்குணங்களுக்கு ப்ரகாசகங்களா யுள்ளவற்றைச் சொல்லி, 'இவற்றுடனே நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்' என்கிறார்

சூ—(கசஉ) திருக்கையிலேபிடித்த திவ்யாயுதங்க ளும் வைத்து அஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும் முறுவலும், ஆஸநபத்மத்திலே யழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்

(வ்யா) 'திருக்கையிலே' என்று தொடங்கி அதாவது—1 கார்ய கரத்வ உபயோகியான 2 ஜ்ஞாநஶக்திகளுக்கு ப்ரகாஶகமாம்படி திருக் கைகளிலே தரித்துக்கொண்டிருக்கிற ஶங்க சக்ராதி திவ்யாயுதங் களும், 3 வாத்ஸல்ய ப்ரகாஶகமாம்படி 4 வைத்து அஞ்சலென்ற கை யும், ஸ்வாமித்வப்ரகாஶகமாகக் கவித்த முடியும், 5 ஸௌஶீல்யப்ர காஶகமான முகமும் முறுவலும், அனைவர்க்கும் கண்டு பற்றலாம்படி யான ஸௌலப்ய ப்ரகாஶகமான ஆஸநபத்மத்திலே அழுத்தின திரு வடிகளுமாய்க் கொண்டு எழுந்தருளி நிற்கிற நிலையே 6 அநந்யகதி களான நமக்கு ரக்ஷக மென்கை

7 உபாய உபேய நிஷ்டர்க்கு அபேக்ஷிதமான ஆகாரங்கள் இரண் டும் கீழ்ச்சொன்னபடியே நிற்கிற திருமேனியிலே தோற்றும் என்கிறார்

---

1 கார்யகரத்வ உபயோகியான - பக்தர்களின் காரியத்தைச் செய்வதாயிருக் கையில் உபயோகமுள்ளனவான 2 ஆயுதத்தை யேந்துகை ஶக்திமானு டைய கார்யமாகையாலும், ஆஶ்ரிதருடைய விரோதிகளையறிந்து அவ்விரோதி களை ஏந்திய ஆயுதங்களைக் கொண்டு நிரஸிப்பது ஜ்ஞாநவானுடைய கார்ய மாகையாலும், எம்பெருமான் தனது திருக்கையிலேந்திய திவ்யாயுதங்கள் அவனது ஜ்ஞாநஶக்திகளுக்கு ப்ரகாஶகமாகும் 3 எம்பெருமானது அஞ்சலென்று காட்டுகின்ற அபயமுத்திரை சேதநர் தமது தோஷங்களை நினைந்து அகலாமலிருக்கைக்குக் காரணமாகையால், வாத்ஸல்ய ஸூசகமாகும் 4 வைத்து - ஒருசொல்விழுக்காடு, தனியே பொருளில்லை 5 ஸௌஶீல்ய மாவது - மஹானாயிருப்பவன் மிகவுந் தாழ்ந்தநிலையிலிருப்பாரோடு பேதமின் றிச் சேர்ந்திருக்கை புன்முறுவலும் மலர்ந்தமுகமும் உண்டாவது இஷ்டர் களைக் காணும்போதே யாதலால், சேதநனை அவ்வெம்பெருமான் காணும் போது அப்பரமனிடத்துத் தோன்றுகின்ற முகவிகாஸமும் மந்தஹாஸமும் அவ் வெம்பெருமானுடைய ஸௌஶீல்யத்தைக் காட்டும் 6 அநந்யகதிகள் - எம் பெருமானைத்தவிர வேறொரு புகலிடமில்லாதவர்கள் 7 உபாய நிஷ்டர்க்கு அபேக்ஷிதமான ஆகாரம் - ரக்ஷகத்வம், உபேயநிஷ்டர்க்கு அபேக்ஷிதமான ஆகாரம் - போக்யத்வம்

ஸூ—(கசங) ரக்ஷகத்வ போக்யத்வங்கள் இரண்டும் திருமேனியிலே தோற்றும்

(வ்யா) 'ரக்ஷகத்வ போக்யத்வங்கள் இரண்டும் திருமேனியிலே தோற்றும்' என்று அதாவது - ரக்ஷணபரிகரமான திவ்யாயுதங்களோடும் ரக்ஷணத்துக்கு கவித்த முடியோடும் கூடி யிருக்கையாலே ரக்ஷகத்வம் தோற்றுகையாலும், *"அணியார் ஆழியும் சங்கமும் ஏந்தும்," †"முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ" என்கிறபடியே அவைதானே அழகுக்கு உடலாய் வைத்தஞ்சலென்ற கையும் முகமும் முறுவலும், ஆஸநபத்மத்திலே அழுத்தின திருவடிகளும் ஒரொன்றே அழகுக்கு எல்லைநிலமாயிருக்கையாலே போக்யத்வம் தோற்றுகையாலும், இரண்டும் திருமேனியிலே ப்ரகாசிக்கும் என்கை

ஆக, நாராயணபதார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

இனி, 'சரணௌ' என்கிற பதத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்

ஸூ—(கசச) சரணௌ = திருவடிகளை

(வ்யா) 'சரணௌ=திருவடிகளை' என்று.

இந்த த்விவசனத்தால் சொல்லுகிற அர்த்தத்தை அருளிச்செய்கிறார்

ஸூ—(கசரு) இத்தால் - சேர்த்தியழகையும், உபாய பூர்த்தியையும் சொல்லுகிறது

(வ்யா) 'இத்தால்' என்று தொடங்கி அதாவது-'சரணௌ' என்று இரண்டு திருவடிகளையும் சொல்லுகிற இத்தால், ‡"இணைத்தாமரையடி" என்கிறபடியே இரண்டுதாமரைப்பூவை 1 நிரைத்துவைத்தாற்போலே யிருக்கிற சேர்த்தி யழகையும் த்விவசநம் இரண்டுக்குமேல

1 நிரைத்து வைத்தாற்போலே - சேரவைத்தாற்போலே
* திருவாய். அ, ௩, ௬.  ‡ திருமொ. ௧, அ, ௩.
† திருவாய். ௩, ௧, ௧.

மறறொனறு புகுர ஸஹியாமையாலே ஸஹாயாநதர நிரபேக்ஷமான உபாயபூாததிமையுஞ சொலலுகிறது எனகை.

இனி, 1 உபாயதவ ஏகாநதமான இதன குணாதிகயததை அருளிச செய்கிறா

ஙூ—(கசகூ) பிராடடியும அவனும் விடிலும் திருவடிகள விடாது, திணகழலாயிருககும்

(வயா) 'பிராடடியும்' எனறு தொடஙகி அதாவது—ஸ்ரீமத பததிலே புருஷகாரபூதையாகசசொனன பிராடடியும அவளதானே * 2 "சிதகுனரககிலும எனனடியாா அதுசெயயாா" எனனுமபடி 3 நாராயணபதததிற சொனன குணவிஶிஷடனான அவனும கை விடிலும, திருவடிகள தன 4 வைலக்ஷணயததாலே 5 துவககிககொளளுகையாலே கைவிடாது, † "வணபுகழநாராணனதிணகழல" எனகிறபடியே பறறினாரை நழுவவிடாத திணமையையுடைததாயிருககும எனகை.

இநதக குணாதிகயததைபபாறவும அனறிககே, இவன தன ஸ்வரூபாநுகுணமும திருவடிகளிலே இழிகை யெனனுமததை ஸதருஷடாநதமாக அருளிசசெயகிறா

ஙூ—(கசஎ) ஶேஷிபககல ஶேஷபூதன இழியும் துறை, பரஜை மூலையிலே வாயவைககுமாபோலே

(வயா) 'ஶேஷிபககல' எனறு தொடஙகி அதாவது - ஶேஷிபககல ஆஶரயிகக இழியும ஶேஷபூதன தன ஸவரூபாநுகுணமாக இழியுந துறை திருவடிகள, 6 ஸதநநதயபரஜை தாயினுடைய அவயவமெலலாம கிடககத தனககு வகுததததாயுளள மூலையிலே வாயவைககுமா போலே யெனகை

---

1 உபாயதவ ஏகாநதமான-உபாயமாயிருபபதறகு அவஶயம வேணடிய 2 சிதது - தோஷம 3 நாராயணபதததிற சொனன குணம - வாதஸலயாதிகள 4 வைலக்ஷணயததாலே - அழகாலே 5 துவககிககொளளுகையாலே- அபபாற போகவொடடாதபடி கடடுபபடுததுகையாலே 6 ஸதநநதயபரஜை - மூலைபபாலுணணுஙகுழநதை

*பெரியாழ - திருமொ-ச, கூ, உ. †திருவாய - க, உ, க0.

‘திருவடிகளைச சொனன இது - திருமேனிககு உபலக்ஷணம்’ எனகிறா, மேல

சூ —(கசஅ) இத்தால, பிராட்டிககு இருபபிடமாயக குணபரகாஶகமுமாய் ஶிஶுபாலனையுமஅகப்படத் திருததிச சேரததுககொளளுந திருமேனியை நினைக்கிறது.

(வயா) ‘இததால’ எனறு தொடஙகி. அதாவது - ‘சரணௌ’ எனறு 1 விகரஹ ஏகதேஶமான திருவடிகளைச சொனன இததால *“திருவிருநத மாாவன” எனனுமபடி ஸ்ரீமதபததததிற சேரனன புருஷகார பூதையான பிராடடிககு இருபபிடமாய, நாராயணபததததிற சொனன குணஙகளுககு பரகாஶகமாய, † “பல பல 2 நாழஞசொலலிப பழிதத சிசுபாலன” எனகிறபடியே 3 பரதவேஷ பரனாய் 4 நிநதோகதிகளைப பணணித திரிநத ஶிஶுபாலனையும உடபட † 5 “அலவலமை தவிாதத அழகன” எனகிறபடியே தனனழகாலே 6 தவேஷாதிகள போமபடி 7 திருததி ‡ 8 “திருவடி தாடபாலடைநத” எனகிறபடியே சோததுககொளளுமஸவபாவததை யுடைததான 9 திவயமஙகள விகரஹததை நினைககிறது எனகை

அநநதரம, ஶரணபதாாததததை அருளிசசெயகிறா

சூ —(கசக) ஶரணம் = இஷடபராபதிககும் அநிஷட நிவாரணததுககும தபபாத உபாயமாக.

---

1 விகரஹஏகதேசமான - திருமேனிககுள ஒரு பகுதியான 2 நாழம - நிநதை 3 பரதவேஷபரனாய - மிககதவேஷததைப பாராடடுபவனாய 4. நிநதோகதிகள - பழிசசொறகள பணணி - சொலலி 5 அலவலமை - வாயவநதபடி பிதறறுகை 6 *தவேஷாதிகள எனற விடததில ஆதிசபதாாததமாகப பழிசசொறகளைக* கொளக 7 திருததி - திருநதசசெயது 8 திருவடிதாடபால - திருவடியெனறு சொலலபபடுகினற இடததில 9 திவயமஙகள விகரஹம - பரமபதததிலுளள பஞசோபநிஷநமயமாய ஹேயபரதயநீகமான திருமேனி

* மூனறாநதிருவநதாதி - நள † பெரியாழ். ச-ங-ரு

‡ திருவாய் - எ, ரு, ங

(வ்யா) 'ஶரணம்' என்று தொடங்கி அர்த்தாவது - (கஉச) "உபாயே க்ருஹரக்ஷித்ரோ: ஶப்த: ஶரணமித்யயம் வர்த்ததே ஸாம்ப்ரதந்த்வேஷ: உபாயார்த்தைகவாசக:" [உபாயே க்ருஹரக்ஷித்ரோ: ஶப்த: ஶரணமித்யயம் — வர்த்ததே ஸாம்ப்ரதந்த்வேஷ: உபாயார்த்தைகவாசக:] என்கிறபடியே ஶரணஶப்தம் ரக்ஷிதாவுக்கும் க்ருஹத்துக்கும் உபாயத்துக்கும் வாசகமே யாகிலும், இவ்விடத்தில் உபாயத்துக்கே வாசகமாகையாலும், 1 உபாய க்ருத்யம் இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹார காரணமாகையாலும், இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக என்று இப்பதத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார். இஷ்டாநிஷ்டங்களாவன இன்னவையென்னுமதைப் பரந்தபடியிலே விஸ்தரேண அருளிச்செய்தார் ஸ்ரிய:பதிப்படியிலும் "அநிஷ்டமாகிறது - அவித்யையும், அவித்யா கார்யமான ராகத்வேஷங்களும், புண்ய பாப ரூபமான கர்மங்களும், 2 தேவாதி சதுர்வித ஶரீரங்களும், 3 ஆத்யாத்மிகாதி து:க பரம்பரைகளும், இஷ்டமாகிறது - 4 அர்ச்சிராதி மார்க்க கமநமும்,

---

1 உபாய க்ருத்யம் - உபாயமாயிருப்பதன் தொழில். இஷ்டாநிஷ்ட ப்ராப்தி பரிஹார காரணம் - இஷ்டத்தை யடைவித்தற்குச் சாதனமாவதும், அநிஷ்டத்தைத் தப்பித்தற்குச் சாதனமாவதும். 2 தேவாதி சதுர்வித ஶரீரங்கள் - தேவ திர்யக் மநுஷ்ய ஸ்தாவர ஶரீரங்கள். 3 ஆத்யாத்மிகாதி து:க பரம்பரைகள் - ஆத்யாத்மிக ஆதிதைவிக ஆதிபௌதிகங்கள். 4 எம்பெருமானது பரமக்ருபையாலே மோக்ஷத்தைப் பெறும் ஆத்மாக்கள் இந்த ஸ்தூலதேஹத்திலிருந்து எழுந்து ஸூக்ஷ்மஶரீரத்தைப் பரிக்ரஹித்து, [illegible]பகரணத்தைப் பற்றிக்கொண்டு முதலில் அர்ச்சிஸ்ஸையும், பின்பு அஹஸ்ஸையும் ஶுக்லபக்ஷாபிமாநியையும் உத்தராயணாபிமாநியையும் ஸம்வத்ஸராபிமாநியையும் வாயுவையும் முறையே கிட்டி அவர்கள் வழிநடத்த, பிறகு ஸூர்யமண்டலத்தைப் பேதித்துக்கொண்டுபோய்ச் சந்திரனைக்கிட்டி அவனைக் கௌரவிக்க, அமாநவனைக் கிட்டி அவன் வழிநடத்த, பின்பு வருணனையும் இந்திரனையும் ப்ரஜாபதியையும் முறையேகிட்டி அவர்கள் லோகங்களையும் கடந்து, இவ்வண்டத்தையும் இவ்வண்டத்தைச் சுற்றியுள்ள ஏழாவரணங்களையும் மூலப்ரக்ருதியையும் கடந்து விரஜையையடைந்து மூழ்கித் தாம் கொண்டிருந்த ஸூக்ஷ்ம ஶரீரமும் கழிந்து, அந்நதியின் கரையிலுள்ள அமாநவனுடைய கரஸ்பர்ஶத்தாலே பஞ்சோபநிஷந்மயமான திவ்யஶரீரத்தை யடைந்தபின்பே புநராவ்ருத்தியில்லாத பரமபதத்தைப் பெறுவார்களென்று சாந்தோக்யம் முதலியவற்றிற் சொல்லுகவாறு, முக்தனுய்ப் போகுமவன் பராஞ்ஜோதிகரமணத்துக்குப் பின்பு போகும் மார்க்கம் அர்ச்சிராதிமார்க்கம் எனப்படும். இந்த மார்க்கத்திற்கு அர்ச்சிஸ்ஸென்று தேவதை முதலாகுதல் காண்க.

பரமபதபராபதியும, பரமாதமதாஸநமும, குணாநுபவகைங்கர்யங்களும்” என்று ஸங்க்ரஹேண அருளிசசெயதார், ஆகையால், இவவிடததிலும அவை 1 வகதவயஙகள

2 கீழ நிரதேசிதத வஸதுவை உபாயமாகச சொனனதன தாதபாயததை அருளிசசெயகிறார

**மூ—(கருO) இததால, ப்ராபயநதானே பராபகம எனகிறது.**

(வயா) ‘இததால, பராபயநதானே பராபகம எனகிறது’ என்று. அதாவது - கீழசசொனன விஷயததை, உபாயமாகச சொலலுகிற இததால பராபய வஸது தானே பராபகம எனனுமிடமு சொல லுகிறது எனகை

கீழ, ‘பராபயபரஸஙகம உணடோ?’ எனன, அருளிசசெய கிறார

**மூ—(கருக) கீழசசொனன மூனறும பராபயமிறே.**

(வயா) ‘கீழசசொனன மூனறும பராபயமிறே’ என்று. அதாவது- 3 ஸமஸதபதமான பூரவபதததிற்சொனன லக்ஷமீவிஶிஷடத வமும, கலயாணகுண 4 யோகமும, 5 திவயமஙகள விகரஹோபேதத வமும ஆகிற மூனறும, (கஉரு) 6 “ஶ்ரியாஸாரதம் - ஆஸதே”

1 வகதவயஙகள - சொலலிககொளளத தககவை 2 கீழ நிரதேசிதத வஸது - ஶ்ரிய:பதியாய ஸமஸதகலயாண குணாதமகனுமாய திவயமஙகள விகரஹததோடு கூடினவனாக ‘ஶ்ரீமந நாராயண சரணௌ’ என்று கீழே கூறிய தொடரிலே ஏறபடட ஶ்ரீமநநாராயணன 3 ஸமஸதபதமான - ஒரேதொடரான பூரவபதம - ஶ்ரீமநநாராயண சரணௌ எனபது ஶ்ரீமத் பதததால லக்ஷமீவிஶிஷடதவமும, நாராயணபதததால கலயாண குணயோகமும, சரண பதததால திவயமஙகள விகரஹ உபேதத்வமும, கூறபபடடன 4 யோகம - சேரககை 5 திவயம - பரகருதிசமபநதமறறது பஞசோபநிஷநமயமான தெனறபடி மஙகளம - ஶுபாஸபதமானது விகரஹம - திருமேனி உபேததவம - கூடியிருககை 6 லக்ஷமீவிஶிஷடன பராபயனெனபதறகு பரமாணம “ஶ்ரியாஸாரதம - ஆஸதே” எனபது கலயாணகுணம பராபய மெனபதறகு பரமாணம - “ஸோஶநுதே ஸரவாந காமாந” எனபது திவயமஙகளவிகரஹம பராபய மெனபதறகு பரமாணம - “ஸதா பஶ்யநதி” எனபது

[ஶரீயாஸாதம - ஆஸதே] (கஉகூ) "ஸவ்ருத்தாந்தே" [ஸாவாநகாமாந் - அஶ்நுதே] (கஉஎ) "ஸஹாவஶ்யதி" [ஸதாபஶ்யந்தி] என்று இவனுக்கு அநுபவவிஷயமாகச் சொல்லப்படுகிறவை யாகையாலே ப்ராப்யமிறே யென்கை.

"ஆனால், 1 இத்தை உபாயமாக்குகிறதுதான் என்?" என்ன, அருளிச்செய்கிறார்

**சூ —(கருஉ) இவன் செயலறுதியாலே உபாயமாக்குகிறானித்தனை**

(வ்யா) 'இவன் 2 செயல் அறுதியாலே உபாயமாக்குகிறானித்தனை' என்று. அதாவது - 3 அகிஞ்சநனாய் அநந்யகதியாயிருக்கிற இவன், 4 தன்செயல்மாட்சியாலே போக்யமான பாலை மருந்தாக்குவாரைப்போலே, ப்ராப்யமானதுதன்னையே ப்ராபகமாக்குகிறானித்தனை யென்கை

இத்தனாலே இவ்வுபாயத்துக்கு ஓர் திஶயம் சொல்லுகிறது என்கிறார்

**சூ —(கருங) "சரணௌ ஶரணம்" என்கையாலே, உபாயாந்தர வ்யாவ்ருத்தமான உபாயம் என்கிறது**

(வ்யா) 'சரணௌ ஶரணம் என்கையாலே' என்று தொடங்கி. அதாவது - 'சரணௌஶரணம்' என்று ப்ராப்யவஸ்துதன்னையே ப்ராபகமாகச் சொல்லுகையாலே, ப்ராப்யம் வேறும் தான் வேறுமாயிருக்

1 உபேயமான வஸ்துவை உபாயமாகப் பற்றுகிறபோதே அவ்வுபேயம் ஸ்வாதீநமாய்விட்டபடியாலே உபாயமாக அதைப் பற்றினதற்கு வேறு சாதிக்கக்கூடிய பயன் என்ன? என்பது சங்கை 2 செயல் அறுதி - செய்யக் கூடியது ஒன்றுமில்லாமை 3 அகிஞ்சநன் - தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும்படி ஸாதநமாக ஒன்றும் தன்னிடத்தில் இருக்கப்பெறாதவன் அநந்யகதி - எம்பெருமானைத் தவிர்த்து வேறு எவரையும் புகலிடமாகக் கொள்ளாதவன் ஆகிஞ்சந்யமாவது - ததேகோபாயத்வ ரூபஸ்வரூப விரோதியான உபாயாந்தர ஶூந்யத்வம் அநந்யகதித்வமாவது - ததேகரக்ஷ்யத்வரூப ஸ்வரூப விரோதியான ரக்ஷகாந்தர ஶூந்யத்வம் இவையிரண்டும், ததேகஉபாயத்வ ததேகரக்ஷ்யத்வங்கட்கு மிகவும் பாகாஶகமாகையாலே, எம்பெருமானையே உபாயமாக்குகிற இது அவற்றிற்கு விரோதியாகாது 4 செயல்மாட்சி=செயலறுதி; மாட்சி - மாண்டுபோதல், இல்லாமற்போதல்

கும் 1 உபாயாந்தரங்களிற்காட்டில் 2 வ்யாவ்ருத்தமான உபாயம் இது என்னுமிடம் சொல்லுகிறது என்கை.

அநந்தரம், க்ரியாபதத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்

சூ —(கருச) ப்ரபத்யே=பற்றுகிறேன்

(வ்யா) 'ப்ரபத்யே பற்றுகிறேன்' என்று இப்பதம் † 'பத்-கதௌ' என்கிற தாதுஸித்தமாகையாலே மதிவாசி ஆகையாலும், 3 உத்தமன் ஆகையாலும், 'பற்றுகிறேன்' என்று இதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்

'இதுதான் மாநஸ வாசிக காயிக ரூபையான த்ரிவிதக்ரியையும் காட்டவற்றாகையாலே, அதில் எந்தக் 4 கரணத்தால் உண்டான பற்று தலைச் சொல்லுகிறது?' என்ன, அருளிச்செய்கிறார்

சூ —(கருரு) வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு *அழிவில்லை; 'ஜ்ஞாநாந் மோக்ஷம்' ஆகையாலே, மாநஸமாகக்கடவது

(வ்யா) 'வாசிகமாகவும்' என்று தொடங்கி அதாவது - (கஉஅ) "ஸ்வஸ்ராணம்" [பவஸ்ராணம்] இத்யாதிப்படியே ரக்ஷிக்கவேணும் என்று ப்ரார்த்திக்கையாகிற கேவலவாசிகமாகவும் (கஉக) "அஞ்ஜலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ" [அஞ்சலி: பரமாமுத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ] என்கிறபடியே பகவத்ப்ரஸாத ஹேதுபூதமான அஞ்ஜலியை ப்ரயோகித்தல், 5 நிஷாத காகாதிகளைப்போலே ரக்ஷகவஸ்து இருந்த இடத்தே வருதல் செய்கையாகிற கேவலகாயிகமாகவும் பற்றினாலும் பலஸித்திக்கு ‡அழிவில்லை (கௗo) "ஜ்ஞாநாந்

1 உபாயாந்தரங்கள் - கர்மம் ஜ்ஞாநம் பக்தி முதலிய உபாயங்கள் இவ்வுபாயாந்தரங்களில் நாராயணன் உபேயமும், கர்மாதிகள் உபாயமுமாதல் காண்க 2 வ்யாவ்ருத்தம் - வேறுபட்டது 3 உத்தமன் - தன்மையிடம் 4 கரணம் - இந்த்ரியம் 5 நிஷாதன் - வேடன், இங்கே குஹப்பெருமாள்.

† தாதுபாடம் - த்விவாதி

* 'இழவில்லை' என்று சில ஸ்ரீகோசங்கள்

‡ 'இழவில்லை' யென்று பாடாந்தரம்.

மோக்ஷ:" [ஜ்ஞாநாந்மோக்ஷ:] என்கிறபடியே ஜ்ஞாநத்தாலே மோக்ஷம் என்கையாலே மாநஸமான பற்றுதலுக்கடவதென்கை. 1, அதாவது - ஒரு புத்திவிசேஷம். இந்தப் புத்திவிசேஷந்தன்னைப் பரந்தபடியிலே விஸ்தரேண அருளிச்செய்தார். ஸ்ரீபஞ்சதிபடியிலும், "இந்தப் புத்திவிசேஷமாகிறது - அநந்யார்ஹசேஷத்வஜ்ஞாநகார்யமாய்; இதரோபாயவ்யாவ்ருத்தமாய், பகவத்ரக்ஷகத்வாநுமதிரூபமாய், 2 ஸக்ருத் அநுஷ்டேயமாய், 3 வ்யபிசார விலம்ப விதுரமாய், ஸர்வாதிகாரமாய், 4 நியமஸௌகர்யமாய், அந்திமஸ்ம்ருதிநிரபேக்ஷமாய், 5 ஸௌலபமாய், யாசஞாகர்ப்பமாய், த்ருடாத்யவஸாயரூபமாய் இருப்பதொரு ஜ்ஞாநவிசேஷம்" என்று அருளிச்செய்தார். ஆகையால், இவ்விடத்தே அதுவும் அநுஸந்தேயம்.

'இப்படி மாநஸமாத்ரமே அமையுமோ? * "சிந்தையாலும்" இத்யாதிப்படியே 6 த்ரிவித கரணத்தாலும் ஸ்வீகரிக்க வேண்டாவோ?' என்ன, அருளிச்செய்கிறார்:

## சூ — (கநிகூ) உபாயம் அவனாகையாலும், இவை நேரே உபாயம் அல்லாமையாலும், இம்மூன்றும் வேணும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை.

(வ்யா) 'உபாயம் அவனாகையாலும்' என்று தொடங்கி. அதாவது - பலஸித்திக்கு உபாயம் - பற்றப்படுகிற ஸர்வேச்வரனாகையாலும், கரணத்ரயத்தாலும் உண்டான பற்றுதலானவை 7 ஆபாத

1 அதாவது - மாநஸமான பற்றுதலைப்பற்ற. 2 ஸக்ருத் - ஒருமுறை தான் அநுஷ்டேயம் அநுஷ்டிக்கத்தக்கது. 3 வ்யபிசாரம் - பலனை விளைப்பதில் தவறுவது, விலம்பம் - காலதாமஸமாவது, விதுரம் - இல்லாதது. 4 நியமஸௌகர்யம் - இப்படிப்பட்டவர்தாம் இன்னகாலத்தில் அநுஷ்டிக்கத்தக்கதென்ற நியமம் இல்லாதது. 5 ஸௌலபம் - சிலகால அநுஷ்டிக்கத்தக்கது. யாசஞாகர்ப்பம் - தன்னுடைய குறையைத் தெரிவித்து இரப்பதைத் தன்னுடபொருளாகக் கொண்டது. த்ருடாத்யவஸாயம் - த்ருடமான எண்ணம். 6 த்ரிவிதகரணம் - மனோவாக்குக்காயமென்ற மூன்று கரணங்கள். ஸ்வீகரித்தல் - பற்றுதல். 7 ஆபாதப்ரதீதி - ஆழ்ந்து நோக்காமல் நுகக்கையில் மேலெழுந்தவாறான தோற்றம்.

* திருவாய். கூ, ரு, கக

பராதிதியில உபாயமபோல தோறறிக கழியுணடுபோம தொழிய, ஸாக்ஷாத உபாயம அலலாமையாலும, பலஸிததிககு அத்யவஸாயாத்மகமாநஸ ஸ்வீகாரமலனறுமே யமையும இமமூனறும வேணு'மென கிற நிரபபநதம இலலை யெனகை 1 அதவா, 'இபபடி ஒனறிலே ஒதுககிச சொலலுகிறது என? தரிவிதகரணததாலும பறறுதலைச சொனனலோ?' எனன, 'உபாயம' இதயாதியாலே அருளிசசெய் கிருராகவுமாம அபபோதைககும ஒனறே அமையும இமமூனறும வேணுமெனகிற நிரபபநதம இலலை யெனகை நிரபபநதம இலலை யெனகையாலே, இநத ஸவீகாரம தரிவிதகரணததாலும உணடாளுலும குறையிலலை யெனனுமிடம தோறறுகிறது "இபபரபததம கரணதரயததாலும உணடாகவுமாம, ஏககரணததாலே உண்டாகவுமாம்; பலஸிததிககுக குறையிலலை அதிகாரபூரததிககுக கரணதரயமும வேணும பலஸிததிககு ஏககரணமே அமையும, உபாயபூர்த்திககு— ஸ்ரிய:பதிதவமும வாதஸலயாதிகுணயோகமும திவயமஙகள் விகரஹமும அபேக்ஷிதமாயிருககிறபபோலே, அதிகாரபூரததிககுக கரணதரயமும் அபேக்ஷிதமாயிருககும" எனறிறே, பரநதபடியிலே இவாதாம அருளிசசெயதது.

(௧௩௧) "𑌸𑌕𑍃𑌦𑍇𑌵 𑌹𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌃 𑌕𑍃𑌤𑍋𑌽𑌯𑌂 𑌤𑌾𑌰𑌯𑍇𑌨𑍍𑌨𑌰𑌮𑍍" [ஸகருதேவஹி ஶாஸதராரதத: கருதோயம தாரயேநநரம] (௧௩௨) "𑌸𑌕𑍃𑌦𑍇𑌵 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌯" [ஸகருதேவபரபநநாய] இதயாதிகளிற சொலலுகிறபடியே பரபததி ஸகருதகரணீயையாயிருகக, வாததமாநமாகச சொலலுகிறது ஏதுககாக?' எனன, அருளிசசெய்கிருர

சூ—(௧௩௩) வாத்தமாந நிரதேஶம் - ஸதவம் தலையெடுதது அஞசினபோது அநுஸநதிக்கைக்காக.

---

1 முதல யோஜநை - மாநஸமாதரமேயமையும வாசிககாயிகமான பறறுதலகள வேணடுவனவலல வெனபது, 'அதவா' எனபது, யோஜநாநதரததை ஆரமபிககிறேமெனறதைக காடடும இரணடாவது யோஜநையின கருதது - மூனறும வேணடுமெனகிற நிரபபநதமிலலை, மாநஸமாகப பறறுதலினறி வாசிகமாகப் பறறிலுமாம, காயிகமாகப பறறிலுமா மெனபது

(வ்யா) 'வாத்தமாந நிர்த்தேசம்' என்று தொடங்கி அதா வது - (கங்ங) "லோகவிக்ராந்த சரணௌ சரணம் தே வ்ரஜம் விபோ" [லோகவிக்ராந்த சரணௌ சரணம் தேவராஜமவிபோ]* "நின் னடியிணை அடைந்தேன்" † "அடி ச்சேர்மாந்து புகுந்தேன்" 1 என்கிற படியே சொல்லாதே 'ப்ரபத்யே' என்று 2 வர்த்தமாநமாகச் சொல் லுகிறது - 3 ப்ரக்ருதியோடே யிருக்கிற இவன் ரஜஸ்தமஸ்ஸுக்க ளாலே கலங்கி 4 உபாயாபாயங்களில் ஏதேனும் ஒன்றிலே அந்வ யித்து, பின்னை ஸத்வம் தலையெடுத்து அநுதாபம் பிறந்து பயப்பட்ட காலத்திலே (கஙச) "ப்ராயச்சித்திரியம் ஸாத்ர யத்புநஸ்ஸரணம் வ்ரஜேத்" [ப்ராயச்சித்திரியம் ஸாத்ர யத்புநஸ்ஸரணம் வ்ரஜேத்] என் கிறபடியே ப்ரபத்தியொழிய அதுக்குப் பரிஹாரம் இல்லாமையா லும், அதுதான் ஸக்ருத் கர்த்தவ்யமானபின்பு புநஃகரணம் ஆகாமையா லும், பூர்வப்ரபத்தனத்தை அநுஸந்திக்கைக்காக 5 கொழுந்துபட்டுக் கிடக்கிற தென்கை

இன்னமும் இவ்வர்த்தமானத்துக்குச் சில ப்ரயோஜனங்களை அரு ளிச்செய்கிறார்

**சூ—(கருஅ) 6 உபாயாந்தரங்களில் நெஞ்சுசெல் லாமைக்கும், காலக்ஷேபத்துக்கும் இனிமையாலே விட வொண்ணாமையாலும் நடக்கும்.**

(வ்யா) 'உபாயாந்தரங்களில்' என்று தொடங்கி அதாவது - 7 பூர்வவாஸனையாலே 8 அவஸ்யமாக உபாயாந்தரங்களிலே மநஸ்ஸு

---

1 என்கிறபடியே சொல்லாதே-என்கிறபடியே இறந்தகாலமாகச் சொல் லாதே 2 வர்த்தமாநமாக -நிகழ்காலமாக 3. ப்ரக்ருதியோடே - சரீரத் தோடே 4 உபாய அபாயங்களில் - (எம்பெருமானைத் தவிர்த்துக் கர்மம் ஜ்ஞாநம் பக்தி முதலிய) உபாயங்களாகிய (ஆத்மஸ்வரூப யாதாத்ம்யஜ்ஞாநத் துக்குக்) கொத்தையை யுண்டாக்குவனவற்றில் ஏதேனும் ஒன்றிலே அந் வயித்து ஏதேனுமொன்றைத் தான் உஜ்ஜீவிக்க ஸாதந மென்று மேற்கொண்டு 5 கொழுந்துபட்ட - மேன்மேலும் இந்தப்ரபத்தி உண்டாகும்படி 6 வர்த்த மாந நிர்த்தேசத்துக்குக் கீழ் ஒருகாரணம் அருளிச்செய்தது, இங்கு வேறு மூன்றுகாரணங்கள் அருளிச்செய்கின்றார் 7. பூர்வவாஸனை - முன் அநுஷ் டித்த அப்யாஸம் 8 .அவஸ்யமாக பாரமார்திகமாக

* திருமொ ரு, அ, க. † திருவாய் சு, கO, கO.

செல்லாமைக்காகவும், இவ்வநுஸந்தாநத்தாலொழியப் போதுபோக்க அரிதாகையாலே காலக்ஷேபத்துக்காகவும், [1] இதனுடைய ரஸ்யதையாலே விடமாட்டாமையாலும், இவ்வநுஸந்தாநம் இடைவிடாமல் நடக்கக்கடவதாயிருக்குமென்கை.

'இங்ஙனன்றிக்கே, பலஸித்திக்குப் பலகாலும் அநுஸந்திக்க வேணுமென்றாலோ?' என்ன, அருளிச்செய்கிறார்.

**சூ — (க௯௯) பேற்றுக்குப் பலகாலும் வேணுமென்று நினைக்கில் உபாயம் நழுவும்.**

(வ்யா.) 'பேற்றுக்கு' என்று தொடங்கி. அதாவது - கீழ்ச்சொன்ன ப்ரயோஜநங்களுக்காக அன்றிக்கே பேற்றுக்கு உறுப்பாகப் பலகாலும் அநுஸந்திக்கவேணுமென்று ப்ரதிபத்திபண்ணில், [2] ஸஹாயாந்தர ஸமஸர்க்காஸஹமான ஸித்தோபாயம் சணற்கயிறுகண்ட ப்ரஹ்மாஸ்த்ரம்போலே, [3] தன்னைக்கொண்டு நழுவும் என்கை.

ஆக, பூர்வவாக்யத்துக்கு அர்த்தம் அருளிச்செய்தாராயிற்று.

இனி, உத்தரவாக்யத்துக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக உபக்ரமிக்கிறார்.

**சூ — (க௨௦) உத்தரவாக்யத்தாலே [4] ப்ராப்யம் சொல்லுகிறது.**

(வ்யா.) 'உத்தர வாக்யத்தாலே ப்ராப்யஞ் சொல்லுகிறது' என்று. ப்ராப்யமாவது - ஸ்ரீய:பதியாய் ஸர்வஸ்வாமியாயிருக்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிற் பண்ணும் கைங்கர்யம்.

[5] ப்ராபகவரணாநந்தரம் ப்ராப்யம் சொல்லுகிற இதுக்கு அபிப்ராயம் அருளிச்செய்கிறார்.

---

1 இதனுடைய ரஸ்யதை - இந்தத் த்வயத்தினுடைய போக்யதை. 2. ஸஹாயாந்தர ஸமஸர்க்க அஸஹமான - வேறே ருதவியின் சேர்க்கையைப் பொறாத 3 தன்னைக்கொண்டு நழுவும் - (இந்தச்சேதநன் பலஸாதநமாகச் செய்யும் ப்ரபத்திக்குந் தான் விஷயமாக இருந்தாலும்) ஸித்தோபாயமான ஸர்வேஶ்வரன் தான் உபாயமாகுந்தன்மை தோற்றாதேயிருப்பா னென்றபடி; நழுவுதல் - போவது தெரியாமற் போகை 4 ப்ராப்யம் - அடையத்தக்கது 5. ப்ராபக வரணம் - உபாயவரணம்

ஸூ — (கசுக) ப்ராப்யாந்தரத்துக்கு அன்றென்கை

(வ்யா) 'ப்ராப்யாந்தரத்துக்கு அன்றென்கை' என்று அதாவது - பூர்வவாக்யத்தில் ப்ரதிபாதிதமான ஸாதநம் 1 பலசதுஷ்டய ஸாதாரணம் ஆகையாலே, கீழ்ப்பண்ணின ப்ராப்யவரணம் 2 ப்ராப்யாந்தரத்துக்கு அன்று என்னுமிடம் சொல்லுகை - இப்போது ப்ராப்யம் சொல்லுகிற இதுக்கு ப்ரயோஜநம் என்றபடி.

'ப்ராப்யாந்தரங்களை விட்டு இந்த ப்ராப்யத்தை அபேக்ஷிக்க வேண்டுவான் என்?' என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார்

ஸூ — (கசுஉ) உபாயாந்தரங்களைவிட்டுச் சரமோபாயத்தைப் பற்றினாற்போலே, உபேயாந்தரமான ஐஶ்வர்ய கைவல்யங்களை விட்டு எல்லையான ப்ராப்யத்தை ஆர்த்திக்கிறது

(வ்யா) 'உபாயாந்தரங்களை விட்டு' என்று தொடங்கி அதாவது - உபாயவரணம் பண்ணுகிற வளவில் 3 அநந்யஶரணத்வரூபமான ஸ்வரூபத்துக்கு அநுகுணமாகக் கர்ம ஜ்ஞாந பக்திகளாகிற உபாயாந்தரங்களை விட்டுச் 4 சரமமான ஸித்தோபாயத்தைப் பற்றினாற்போலே உபேயப்ரார்த்தனை பண்ணுகிற வளவிலும் அநந்யபோக்யத்வரூபமான ஸ்வரூபத்துக்கு அநுகுணமாக உபேயாந்தரமான ஐஶ்வர்ய கைவல்யங்களை விட்டுச் சரமமான ப்ராப்யத்தை 5 ஆர்த்திக்கிறது என்கை.

நினைவறியும் ஈஶ்வரன்பக்கல் ப்ரார்த்தனை 6 மிகையென்றிருப்பார் பண்ணும் ப்ரஸங்கத்தை அநுவதிக்கிறார்

ஸூ — (கசுங) 'இவன் ஆர்த்திக்கவேணுமோ? ஸர்வஜ்ஞன் இவன் நினைவு அறியானோ?' என்னில்,—

---

1 பலசதுஷ்டயம் - நால்வகைப்பயன் நால்வகைப்பட்ட பயன்களுள் எந்தப்பயனை வேண்டுபவர்களும் இந்தஸித்தோபாயத்தை உபாயமாக வரிக்கலாமாகையால் 'பலசதுஷ்டய ஸாதாரணம்' என்றது. பலசதுஷ்டயமாவன-அபூர்வ ஐசவர்யமும், இழந்த ஐசவர்யமும், கைவல்யமும், எம்பெருமான் திருவடிகளுமே என்பன 2 ப்ராப்யாந்தரம் - பலசதுஷ்டயங்களில் எம்பெருமான் திருவடிகளைத் தவிர்த்த மற்றை மூன்றும் 3 அநந்யஶரணத்வம்-எம்பெருமானைத் தவிர்த்து வேறொன்றை உபாயமாகக் கொள்ளாதிருக்கை 4 சரமமான - கடைசியான, முடிவான 5 ஆர்த்திக்கிறது - ப்ரார்த்திக்கிறது 6 மிகை - அதிகமானது, அநாவசியமானது

(வ்யா) 'இவன் ஆர்த்திக்கவேணுமோ? ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோ?' என்னில், என்று

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்

மூ—(கஉச) இவன் பாசுரம் கேட்டவாறே திருவுள்ளம் உகக்கும்

(வ்யா) 'இவன் பாசுரம் கேட்டவாறே திருவுள்ளமுகக்கும்' என்று அதாவது — 1 ருக்ணதையாலே சோற்றில் ஆசையற்றுக் கிடந்த ப்ரஜை ரோகந்தீர்ந்து பசிவிளைந்து 'சோறு' என்று அபேக்ஷிக்கும் பாசுரம் கேட்டால் பெற்றதாய் உகக்குமாபோலே, அநாதிகாலம் 2 ப்ராப்யாந்தர ப்ராவண்யமாகிற நோய்கொண்டு 3 இந்த ப்ராப்யத்தில் நசையற்றுக்கிடந்தவன் இதிலே ருசி பிறந்து தன் பக்கலிலே வந்து இதனை அபேக்ஷிக்கிற பாசுரம் கேட்டவாறே, சேஷியான அவன் 4 திருவுள்ளம் உகக்கும் அதுக்காக ஆர்த்திக்கிறானித்தனையென்கை

இனி, இவ்வாக்யத்துக்கு 5 ப்ரதிபதம் அர்த்தம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமபதத்தை உபாதாநம் பண்ணுகிறார்

மூ—(கஉரு) ஸ்ரீமதே = பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு

(வ்யா) 'ஸ்ரீமதே' என்று அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், 'பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு' என்று இங்கும் ஸ்ரீமத்பதத்துக்குப் பூர்வவாக்யத்திற் சொன்ன 6 வ்யுத்பத்தித்வயமும் அதில் அர்த்தமும் மதுபர்த்தமான நித்யயோகமும் அநுஸந்தேயம்

இரண்டிடத்திலும் நித்யயோகம் ஒத்திருக்கச்செய்தே 7 அவஸ்தாநுகுணமாக இவளிருக்கும் இருப்பை அருளிச்செய்கிறார்

---

1 ருக்ணதை-நோய்கொண்டவனாயிருக்கை 2 ப்ராப்யாந்தர ப்ராவண்யம் - எம்பெருமானைத் தவிர வேறுவிஷயங்களில் மனம் ஊன்றியவனாகை 3 இந்தப்ராப்யத்தில் - எம்பெருமானுடைய கைங்கர்யமாகிற உபேயத்தில் நசையற்று - விருப்பமில்லாமல் 4 திருவுள்ளமுகக்கும் - மனம் மகிழ்வான 5 ப்ரதிபதம்-பதந்தோறும், ஒவ்வொரு பதத்துக்கும் 6 வ்யுத்பத்தித்வயமும் கர்மணிவ்யுத்பத்தி கர்த்தரிவ்யுத்பத்தி என்ற இருவகை வ்யுத்பத்தியும் 7 அவஸ்தாநுகுணமாக - அந்தந்தநிலைமைக்கு ஏற்ப

ஶ்ரூ—(கஅகூ) அவன் உபாயமாமிடததில தான புருஷகாரமாயிருககும; அவன பராபயனுமிடத்தில தான ப்ராபயையுமாயக கைஙகாயவாததகையுமா யிருக்கும்

(வ்யா) 'அவன உபாயமாமிடததில' என்று தொடஙகி அதாவது-அவன சேதநாககு அநிஷடநிவருததி இஷட பராபதிகளுககு உபாயமாமிடததில ஸஹாயாநதரஸபாஸாககததை ஸஹியாமையாலே தான 1 உபாயபாவததில அநவயமினறிககே, 2 ஸாபராத சேதநருடைய அபராதஙகளைப பாராதது அவன சீறுமளவில அதனைதஸஹிதது அஙகீகரிககுமபடிப்பாகப பணணும புருஷகாரமாயிருக்கும, அவன சேதநாககுக 3 கைஙகாயபரதிஸம்பநதியா பராபயனுமிடததில 4 அவனோபாதி கைஙகாய பரதிஸமபநதியாயககொணடு தான பராபயையுமாய இவாகள செயயுஙகைஙகாயநதை அவனதிருவுளளததிலே ஒன்று பததாகபபடுததி உகபபிககையாலே, கைஙகாய வாததகையுமாயிருககு மெனகை. இததனைப பாகதபடியிலே "பூாவவாகயததில ஸ்ரீமசசபதம-சேதநருடைய அபராததகையும ஈஸவரனுடைய ஸவாதநதாயததையுங கணடு, 'இவாகள அவனுடைய கரோததநுககு விஷயபூதராய நஸிததுபபோகாதே அவனைககிட்டி உஜஜீவததுபபோகவேணும' என்று ஸாபராதரான சேதநரை ஈஸவரனோடே சோககைககாக என்றுமஒகக விடாதேயிருககும இருபபைச சொலலுகிறது, இங்குததை ஸ்ரீமசசபதம - கைஙகாயபரதிஸமபநதிதவததைப பறறவும, இவாகள பணணுங கைஙகாயததை ஈஸவரன திருவுளளததிலே ஒன்று பததாகப படுததுகைககாகவும, 6 அநுபவவிசசேதததில தனககு ஸததாஹாநி பிறககுமபடி இருககையாலே 7 நிரநதர ஸமஸலேஷததுககாகவும, அவனை க்ஷணகாலமும பிரியாதே ஸாவகாலமும 8 ஸமஸலிஷடையாயிருககும இருபபைச சொலலுகிறது" என்று விஸதரேண அருளிசசெயதார

---

1 உபாயபாவம - உபாயமாயிருககை 2 ஸாபராத சேதநா - குறறமுளள சேதநா 3 கைஙகாயபரதிஸமபநதியா - கைஙகாயததை யேறறுககொளளுமவனாக எனறபடி 4 அவனோபாதி - அவனைபபோலே 5 என்றும ஒகக - எபபோதுமாக 6 அநுபவவிசசேதம - அநுபவததின இடையீடு 7 நிரநதர ஸமஸலேஷம - இடைவிடாமற சோநதிருககை 8 ஸமஸலிஷடை - சோநதிருபபவள

திருமந்த்ரத்தில் உத்தரபதத்துக்கு இவ்வுத்தரவாக்யம் விவரணமா யிருக்கிறபடியை அருளிச்செய்கிறார்

மூ —(கஅஎ) இதிலே திருமந்த்ரத்தில் சொன்ன ப்ராப்யத்தை விசதமாக அநுஸந்திக்கிறது

(வ்யா) 'இதிலே' என்று தொடங்கி. அதாவது-கைங்கர்யப்ரதிஸம்பந்தி 1 ஒரு மிதுநமென்னு மிடத்தை 2 சாப்தமாக ப்ரதிபாதிக்கிற இந்த வாக்யத்திலே, திருமந்த்ரத்தில் 'நாராயணாய' என்று கைங்கர்யப்ரதிஸம்பந்தி ஒருமிதுந மென்னுமிடம் ஆர்த்தம் ஆகையாலே அவிசதமாகச் சொன்ன ப்ராப்யத்தை விசதமாக அநுஸந்திக்கிறதென்கை அங்கு, 'நாராயணனுக்கே அடிமை செய்யப்பெறுவேனாக வேணும்' என்கிற இவ்வளவொழிய, 'அடிமைகொள்ளுமவன் ஸ்ரீமானாகவேணும்' என்றும், 'அடிமைசெய்யுமவன் நிர்மமனாக வேணும்' என்றும் சொல்லாமையாலும், அவை இரண்டும் இங்குச் சொல்லுகையாலு மிறே, அந்தப்பதத்துக்கு இவ்வாக்யம் விவரணமாயிற்று

'இம்மிதுநத்துக்கே அடிமைசெய்யவேணும் என்கிற நிர்ப்பந்தந்தான் என்?' என்ன, அருளிச்செய்கிறார்

மூ —(கஅஅ) இளையபெருமாளைப்போலே இருவருமான சேர்த்தியிலே அடிமைசெய்கை முறை.

(வ்யா) 'இளையபெருமாளைப்போலே' என்று தொடங்கி அதாவது-(கஉரு) "பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே - அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதஶ்ச தே" [பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே - அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதஶ்ச தே] என்று பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியிலே அடிமைசெய்த இளையபெருமாளைப்போலே இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்கை - இவ்வாத்மாவுக்கு ஸ்வரூப

---

1 ஒருமிதுனம் - ஒரு தம்பதி, அவர்களாவார் - நாராயணனும், ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் 2 சாப்தம் சப்தசக்தியினாலே தோன்றும் பொருள்

ப்ராப்தமெனகை. மிதுநஶேஷத்வம் ஸ்வரூப மானால் மிதுநகைங்கர்ய மிறே ஸ்வரூபப்ராப்தம்

இன்னமும் அசசோத்தியிலே அடிமைசெய்யுமளவில் உள்ள வாசியை அருளிச்செய்கிறார்

ஸூ—(௧௯௯) அடிமைதான் ஸித்திப்பதும் ரஸிப்ப தும் அசசோத்தியிலே

(வ்யா) 'அடிமைதான்' என்று தொடங்கி. அதாவது-ஸ்வதந்த்ர னை ஈஶ்வரன் உபேக்ஷியாமல் கைங்கர்யம் கொண்டருளும்படி பண் ணுமவள் இவளாகையாலே (௧௩௯) "ஸீதாஶ்ச²வாஷ" [ஸீதாமுவாச] (௧௩௭) "ஸீதாஸமக்ஷம் காகுத்ஸ்தமிதம் வசநமப்ரவீத்" [ஸீதா ஸமக்ஷம் காகுத்ஸ்த மிதமவசந மபரவீத] என்று இவள் முன்னிலை யாகத் தம்முடைய ஸ்வரூபாநுரூபமான அடிமையை அபேக்ஷித்துப் பெற்ற இளையபெருமாளைப்போலே இவன் ப்ரார்த்திக்கிற அடிமை தான் ஸித்திப்பதும், மாதாபிதாக்கள் இருவருமான சேர்த்தியிலே ஶுஶ்ரூஷை பண்ணும் புத்ரனுக்குப்போலே செய்கிற அடிமைதான் ரஸிப்பதும், பிராட்டியும் அவனுமான சேர்த்தியிலே யெனகை

இனி, இரண்டாம் பதத்தை உபாதானம் பண்ணுகிறார்

ஸூ—(௧௭௦) நாராயணாய = ஸர்வஶேஷியாயுள்ளவ னுக்கு

(வ்யா.) 'நாராயணாய' என்று அதுக்கு அர்த்தம் அருளிச்செய் கிறார், 'ஸர்வஶேஷியாயுள்ளவனுக்கு' என்று நாராயணத்வம் உபயவிபூதிநாதத்வ மாகையாலே 'ஸர்வஶேஷியாயுள்ளவனுக்கு' என் கிறார் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாவான் ஶேஷியிறே.

கைங்கர்யந்தான் 1 அநுபவஜநித ப்ரீதிகாரிதமாகையாலும், அந்த ப்ரீதிதான் 2 அநுபாவ்ய விஷயாதீநையாகையாலும், அநுபாவ்யவிஷ யம் சொல்லவேண்டுகையாலே அருளிச்செய்கிறார்

1 அநுபவஜநித ப்ரீதிகாரிதம் பகவானுடைய குணம் மேனி ஏ ட இவைகளை அநுபவிப்பதனால் தோன்றுகின்ற ப்ரீதியினாலே செய்யப்பட்டது

2 அநுபாவ்யம் - அநுபவித்தற்கு உரியது

ஸூ—(௱௭௧) இதிலே திருமேனியையும் குணங்களையும் சொல்லும்

(வ்யா) 'இதிலே திருமேனியையும் குணங்களையும் சொல்லும்' என்று அதாவது - கைங்கர்யப்ரதிஸம்பந்தியைச் சொல்லுகிற இப்பதத்திலே, கைங்கர்யத்துக்குப் [1] பூர்வபாவியாயிருக்கும் அநுபவத்துக்கு விஷயமான திவ்யமங்கள விக்ரஹத்தையும், கல்யாண குணங்களையும் சொல்லும் என்கை

(௱௩௮) "ஸூர்யஸஹஸ்ரதி" [ஸதாபச்யந்தி] என்றும், (௱௩௯) "ஸோச்நுதே ஸர்வாந் காமாந்" [ஸோச்நுதே ஸர்வாந் காமாந்] என்றும் இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே திவ்யமங்கள விக்ரஹமும் கல்யாணகுணங்களும், (௱௪௦) "ரஸம்ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி" [ரஸம்ஹ்யேவாயம்லப்த்வாநந்தீபவதி] என்கிற ஸ்வரூபத்தோபாதி கைங்கர்யவர்த்தகங்களுமாய்ப் போக்யங்களுமாயிறே யிருப்பது, 'குணங்கள்' என்று ஸாமாந்யேந சொல்லுகையாலே ஜ்ஞாநசக்த்யாதி குணங்களோடு வாத்ஸல்யாதி குணங்களோடு ஸௌசீல்யாதி குணங்களோடு வாசியற எல்லாக்குணங்களும் அநுபாவ்யங்களா யிருக்கையாலே, பூர்வவாக்யத்தில் நாராயணபதத்தில் உபாயவரணத்துக்கு [2] உபயுக்ததயா அநுஸந்தேயங்களான குணவிசேஷங்களும் இப்பதத்தில் ப்ராப்யதயா அநுஸந்தேயங்கள், ஆச்ரயமான ஸ்வரூபத்துக்கு [3] ஆகாரத்வயமுண்டாயிருக்கிறாப்போலே, ஆச்ரயிகளான குணவிசேஷங்களுக்கும் ஆகாரத்வயமும் உண்டாயிறே யிருப்பது இவையெல்லாம் பரந்தபடியிலே அருளிச்செய்தார்

இனி, இப்பதத்துக்குத் தாத்பர்யம் இன்னதிலே என்கிறார்

ஸூ—(௱௭௨) சேஷித்வத்திலே நோக்கு

(வ்யா) 'சேஷித்வத்திலே நோக்கு' என்று அதாவது - [4] அநுபாவ்யத்வம் அவிசிஷ்டம் ஆகையாலே ஸகலகுணங்களும் ப்ரதிபாதி

1 பூர்வபாவி - முன்னம் உண்டாயிருப்பது 2 உபயுக்ததயா - உபயோகமுள்ளதா யிருத்தலினாலே. 3 ஆகாரத்வயம் - உபாயமாக இருத்தலோடு உபேயமாயு மிருக்கை 4 அநுபாவ்யத்வம் அவிசிஷ்டம் - அநுபவித்தற்கு ஏற்றவையாத லென்பது (எல்லாக் குணங்கட்கும்) ஒத்ததவை, அவிசிஷ்டம் - ஒன்றற்கு விசேஷமாகாதது எல்லாவற்றிற்கு முள்ள தென்றபடி

தமாயிருந்ததேயாகிலும், 1 சதுர்த்தயமஸ்த்திற் சொல்லுகிற 2 வ்ருத்தி விசேஷத்துக்கு மிகவும் அந்தரங்கமாயிருப்பது சேஷித்வமாகை யாலே, அதிலே இப்பதத்துக்கு நோக்கு என்கை.

இந்த சேஷித்வ 3 கதநத்துக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார்

சூ—(கஎங) ப்ராப்தவிஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது

(வ்யா) 'ப்ராப்தவிஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது' என்று அதாவது— (கசக) "ஸேவா ஶ்வவ்ருத்திராக்யாதா" [ஸாவமபரவஸ்ம துக்கம்] என்றும் (கசஉ) "ஸேவாஶ்வவ்ருத்தி:" [ஸேவாஸ்வவ்ருத்தி:] என்றும் சொல்லுகிறபடியே நிஷித்தமான அப்ராப்த விஷயத்தில் கைங்கர்யம்போலன்றிக்கே, (கசங) "ஶாயாவா ஸத்வமநுகச்சேத்" [சாயாவாஸத்வ மநுகச்சேத்] என்றும், (கசச) "ஸாக்ஷாந் நரஸேவ்யதே" [ஸாகிமாத்தமநஸேவ்யதே] என்றும் சொல்லுகிறபடியே, 4 விஹிதமான ப்ராப்தவிஷயத்திற் பண்ணுங் கைங்கர்யமிறே, இவனுக்கு ரஸிப்பதென்கை.

இனி, இப்பதத்தில் விபக்தியம்ஸத்துக்கு அர்த்தம் அருளிச்செய் கிறார்

சூ—(கஎச) இந்தச் சதுர்த்தி கைங்கர்யத்தை ப்ரகாசிப்பிக்கிறது

(வ்யா) 'இந்தச்சதுர்த்தி' என்று தொடங்கி அதாவது—சேஷத்வ ஜ்ஞாநகார்யமான உபாயபரிக்ரஹத்துக்கு அநந்தரம் ப்ராப்தமாயுள்ளது ஆகையாலே, தாதர்த்ய ப்ரதிபாதகம் அன்றிக்கே இந்தச் சதுர்த்தி பரிக்ரஹித்த உபாயத்தினுடைய பலமான கைங்கர்யத்தை ப்ரகாசிப்பிக்கிறதென்கை. கைங்கர்யத்தை ப்ரகாசிப்பிக்கையாவது—கைங்கர்ய ப்ரார்த்தனையை ப்ரதிபாதிக்கை. கைங்கர்யமாவது—பகவந் முகவிகாஸ ஹேதுவான வ்ருத்திவிசேஷம். இக் கைங்கர்யந்தான் (கசரு) "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" [ஏதத்ஸாமகாயந்நாஸ்தே] என்றும், (கசசு) "நம இத்யேவ வாதிந:" [நமஇத்யேவவாதிந:] என்

1 சதுர்த்த்யம்ஸம் - நாராயணாய என்றவிடத்து உள்ள சதுர்த்தியின் பகுதி 2 வ்ருத்திவிசேஷம் - கைங்கர்யம் 3 கதநம் - சொல்லுகை 4 விஹிதம் - விதிக்கப்பட்டது

றும, (௧௪௭) ''யெநயெநயாதாம வதி தெநதெநஸஹம வதி'' [யேநயேநதாதாகசசதி தேநதேநஸஹகசசதி] எனறும இதயாதிகளில சொலலுகிறபடியே வாசிககாயிகரூபமா யிருககும

'இககைஙகாயம 1 பராாததநீயமாகில காதாசிதகமாகாதோ ?' எனன, அருளிசசெயகிறா

சூ—(௧௭௫) கைஙகாயநதான நிதயம.

(வயா) 'கைஙகாயநதான நிதயம' எனறு அதாவது-ஶேஷதவமே ஆதமாவுககு ஸவரூபமாகையாலும, (௧௪௮) ''அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:'' [அகிஞசிதகரஸய ஶேஷதவாநுபபத்தி:] எனகிறபடியே 2 கிஞசிதகாராபாவததில அதுதான அநுபபநநமாகையாலும, கைஙகாயம ஆதமாவுககு நிதயமெனகை ஆகையாலிறே, (௧௪௯) ''நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி'' [நிதயகிஙகர: பரஹாஷயிஷயாமி] எனறும, (௧௫௦) ''நித்யகிங்கரோ பவானி'' [நிதயகிஙகரோ பவாநி] எனறும ஆசாயாகள அருளிசசெயதது

'நிதயமாயிருககுமாகில பராாததிககவேணுமோ?' எனன, அருளிசசெயகிறா

சூ.—(௧௭௬) நிதயமாக பராாததிததே பெறவேணும

(வயா) 'நிதயமாக பராாததிததே பெறவேணும' எனறு அதாவது - 3 விஷயம *உததுஙகமா யிருககையாலும, 4 ஆஶரயபூதனான சேதநன அதயநத பாதநதரனா யிருககையாலும, பராாததநாவிஶேஷம இலலாதபோது கைஙகாயம விததியாமையாலும, நிதயமாக பராாததிததே பெறவேணும எனகை

இது நிதயபராாததநீயம ஆகைககு 5 நிதாநததை அருளிசசெயகிறா

1 பராாததநீயம - பராாததிததறகுஉரியது 2 கிஞசிதகார அபாவததில - கைஙகாயஞ செயயாதபோது அதுதான - ஶேஷதவமதான, அநுபபநநம - கூடாது 3 விஷயம உததுஙகம - கைஙகாயததுககு விஷயமான ஈசவரன ஸாவஸமாதபரன 4 ஆஶரயபூதன - கைஙகாயததுககு ஆஶரயமானவன: காததாவானவ னெனறபடி 5 நிதாநம - காரணம

* 'உததுஙகததவம' எனறு சில ஸ்ரீகோசஙகளு

ழு —(களஎ) ஶேஷிக்கு அதிஶயத்தை விளைக்கை ஶேஷபூதனுக்கு ஸ்வரூபலாபமும், ப்ராப்யமும்.

(வ்யா) 'ஶேஷிக்கு' என்று தொடங்கி அதாவது - (௧௫௧) "நாகிஞ்சித்குர்வத: ஶேஷத்வம்" [நாகிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வம்] என்கிறபடியே ஶேஷிக்கு அதிஶயகரமல்லாத வஸ்துவுக்கு ஶேஷத்வம் இல்லாமையாலே, ஶேஷியான ஈஶ்வரனுக்குத் தன்னுடைய 1 வ்ருத்தி விஶேஷங்களாலே பரிநிரூபமான அதிஶயத்தை விளைக்கை ஶேஷபூதனானவனுக்குத் தன் ஸ்வரூபலாபமுமாய், அவனுடைய முகோல்லாஸாநுப்வத்துக்கு உறுப்பாயிருக்கையாலே ப்ராப்யமுமாயிருக்குமென்கை ஆகையாலே, நித்யப்ராரத்த்யமாயிருக்குமென்று கருத்து

அநந்தரம், சரமபதத்தை உபாதாநம் பண்ணுகிறார்

ழு —(களஅ) நம: = கைங்கர்யத்தில் களையறுக்கிறது

(வ்யா) 'நம:' என்று அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், 'கைங்கர்யத்தில் களையறுக்கிறது' என்று அதாவது - நமஶ்ஶப்தம் ஸாமாந்யேந அஹங்கார மமகாரங்களைக் கழிக்கையாலே, திருமந்த்ரத்தில் மத்யமபதமான நமஶ்ஶப்தம்போலே ஸ்வரூப உபாய புருஷார்த்த விரோதிகள் மூன்றையும் கழிக்க வற்றாயிருந்ததேயாகிலும், இங்கு அங்ஙன்னன்றிக்கே, 2 கைங்கர்யப்ரார்த்தநாநந்தரோக்தம் ஆகையாலே, இந்தக் கைங்கர்யத்தில் விரோதியைக் கழிக்கிறது என்கை.

'கைங்கர்யத்துக்குக் களை எது?' என்ன, அருளிச்செய்கிறார்

ழு —(களகூ) களையாவது — தனக்கென்னப் பண்ணுமது.

(வ்யா) 'களையாவது தனக்கென்னப்பண்ணுமது' என்று. தனக்கென்னப் பண்ணுகையாவது - (௧௫௨) "போக்தாஹம் மம போகோயம்" [போக்தாஹம் மமபோகோயம்] என்கிறபடியே, இத்தைத் தன்னுடைய 3 ரஸத்துக்கு உறுப்பாக நினைத்துப் பண்

1 வ்ருத்திவிஶேஷம் - கைங்கர்யம் 2 கைங்கர்யப்ரார்த்தநா - கைங்கர்ய ப்ரார்த்தனைக்கு, அநந்தரம் - பின்பு, உக்தம் - சொல்லப்பட்டது 3 ரஸத்துக்கு - ஸந்தோஷத்துக்கு

ஞுகை, பகவந்முகவிகாஸஹேதுவாகையாலே இது நமக்கு ஆதரணீயம் என்கிற ப்ரதிபத்தி ஒழிய, இதில் போக்த்ருத்வ ப்ரதிபத்தியும் 1 மதீயத்வப்ரதிபத்தியும் நடக்குமாகில், அபுருஷார்த்தமாயிறே இருப்பது.

இன்னும் இந்தக் கைங்கர்யப்ராப்திக்கு விரோதிகளானவையும் இதிலே தள்ளுண்ணுமென்கிறார்.

ஸூ.—(க௮௦) இதிலே அவித்யாதிகளும் கழியுண்ணும்.

(வ்யா.) 'இதிலே அவித்யாதிகளும் கழியுண்ணும்' என்று அதாவது - அஹங்கார மமகார நிவ்ருத்தியைப் ப்ரார்த்திக்கிற இந்நமஸ்ஸிலே (க௫௩) "𑌅𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑌾 𑌅𑌸𑍍𑌵𑍇 𑌸𑍍𑌵𑌮𑌿𑌤𑌿𑌯𑌾 𑌮𑌤𑌿𑌃 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑌰𑍁𑌸𑌂𑌭𑍂𑌤𑌿𑌬𑍀𑌜𑌮𑍇𑌤𑌦𑍍𑌦𑍍𑌵𑌿𑌧𑌾𑌸𑍍𑌥𑌿𑌤𑌂" [அநாத்மந்யாத்மபுத்திர்யா அஸ்வே ஸ்வமிதியா மதி: — அவித்யாதருஸம்பூதிபீஜமேதத் த்விதாஸ்திதம்] என்கிறபடியே 2 அநாத்மநி ஆத்மபுத்த்யாதிகளை வடிவாகவுடைத்தாய்க் கர்மோத்பத்திகாரணமாயிருந்துள்ள 3 அவித்யையையும், தத்கார்யமான கர்மங்களும், தத்கார்யமாயவரும் ப்ரக்ருதி ஸம்பந்தமும் எல்லாம் கழியுண்ணும் என்கை.

ஆகையிறே, த்வயவிவரணமான கத்யத்திலே நமஶ்ஶப்தார்த்தத்தை அநுஸந்தித்து அருளுகிறவளவில் (க௫௪) "𑌮𑌨𑍋𑌵𑌾𑌕𑍍𑌕𑌾𑌯𑍈𑌃" [மநோவாக்காயை:] இத்யாதி சூர்ணையாலே, அக்ருத்யகரணாதி அகிலகர்மநிவ்ருத்தியையும் (க௫௫) "𑌅𑌨𑌾𑌦𑌿𑌕𑌾𑌲𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌤" [அநாதிகாலப்ரவ்ருத்த] இத்யாதி சூர்ணையாலே அவித்யா நிவ்ருத்தியையும், (க௫௬) "𑌮𑌦𑍀𑌯𑌾𑌨𑌾𑌦𑌿" [மதீயாநாதி] இத்யாதி சூர்ணையாலே ப்ரக்ருதிஸம்பந்தநிவ்ருத்தியையும் பாஷ்யகாரர் ப்ரார்த்தித்தருளிற்று.

ஆனாலும், இதுக்குப் ப்ரதாநார்த்தம் கைங்கர்யத்தில் ஸ்வப்ரயோஜந நிவ்ருத்தியாகையாலே, அத்தை உபபாதிக்கிறார் மேல்.

அதில் ப்ரதமத்திலே, 'கைங்கர்யம் பண்ணும்போது தான் எப்படியாகவேணும்?' என்ன, அருளிச்செய்கிறார்.

ஸூ.—(க௮௧) * "உனக்கே நாமாட்செய்வோம்" என்னும்படியே ஆகவேணும்.

---

1 மதீயத்வ ப்ரதிபத்தி - எனது என்கிற எண்ணம் 2 அநாத்மநி - ஆத்மாவாகாத உடம்பில் ஆத்மபுத்தி - ஆத்மாவென்கிற எண்ணம் 3 அவித்யை - அஜ்ஞாநம்

* திருப்பாவை - உ௯

(வ்யா) * ' "உனக்கே நாமாட்செய்வோம்" என்னும்படியேயாக வேணும்' என்று அதாவது - கைங்கர்யம் பண்ணுமளவில் 'உனக்கே நாமாட்செய்வோம்' என்று 'உனக்கும் எங்களுக்குமாயிருக்கும் இருப்பு தவிர்ந்து, உனக்கேயுகப்பாக நாங்கள் அடிமைசெய்யவேணும்' என்கிறபடியே, சேஷிக்கே உகப்பாகப் 1 பண்ணவேணு மென்கை † "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" என்றிறே ஆழ்வாரும் அருளிச்செய்தது

இனி, இந்தக் கைங்கர்யத்துக்கு விரோதிகளை அருளிச்செய்கிறார்

சூ—(கஅஉ) ஸௌந்தர்யமும் அந்தராயம், கீழ்ச் சொன்ன கைங்கர்யமும் அப்படியே

(வ்யா) 'ஸௌந்தர்யமும்' இத்யாதி வாக்யத்வயத்தாலே அதாவது - அவனுடைய 2 விக்ரஹஸௌந்தர்யமும் 3 சித்தாபஹாரியாய்க் கைசோரப்பண்ணுகையாலே, கைங்கர்யத்துக்கு விக்நம், இந்நமஸ்ஸுக்குக் கீழே சதுர்த்தியிற்சொன்ன கைங்கர்யமும் 4 அபிமதவிஷயபரிசர்யை போலே 5 ஸ்வரஸத்துக்கு உடலாயிருக்கையாலே, அவனுடைய முகமலர்த்தியே ப்ரயோஜநமாக ‡ இருக்குமதுக்கு 6 அதுவும் விக்நமென்கை

7 இப்படியாகையால், இவ்விரோதி நிவ்ருத்தி ப்ரார்த்தனை இடைவிடாமல் நடக்கும்படியை அருளிச்செய்கிறார்

சூ—(கஅங) கைங்கர்ய ப்ரார்த்தனைபோலே இப்பதத்தில் ப்ரார்த்தனையும் என்றும் உண்டு

(வ்யா) 'கைங்கர்ய ப்ரார்த்தனைபோலே' என்று தொடங்கி அதாவது - சதுர்த்தியிற் சொல்லுகிற கைங்கர்யப்ரார்த்தனை 8 காதாசித்கமன்றிக்கே நித்யமாய்ச் செல்லுமாபோலே, இப்பதத்திற

1 'பண்ணவேணும்' என்பதற்கு முன்பு 'அடிமைதவிராமல்' என்று வருவித்துக்கொள்க 2 விக்ரஹஸௌந்தர்யம் - திருமேனியின் அழகு 3 சித்தாபஹாரியாய் - மனத்தைக் கவர்வதாய் 4 அபிமதவிஷயம் - தனக்கு இஷ்டையான ஸ்த்ரீ முதலியன 5 ஸ்வரஸத்துக்கு - தானுடைய மகிழ்ச்சிக்கு 6 அதுவும் - பகவத்கைங்கர்யமும் 7 இப்படியாகையால் - ஒன்றுகப் புகுரப் பண்ணும் கைங்கர்யமும் ஸ்வபரீதிக்கு காரணமான பகவத் ஸௌந்தர்யமும், கேவலம் பகவந்முகோல்லாஸார்த்தமாகச் செய்யும் கைங்கர்யத்துக்கு விரோதியாகையாலே 8 காதாசித்கம் - எப்போதாவது ஒருகாலுண்டாவது

* திருப்பாவை - உக ‡ 'உடையவனுக்கு' என்றும் பாடமுண்டு.

† திருவாய் - உ, க, ச

சொல்லுகிற கைங்கர்யவிரோதி நிவ்ருத்தி ப்ரார்த்தனையும், இங்கிருக்கும் காலத்தோடு 1 ப்ராப்யபூமியிற் போன காலத்தோடு வாசியற எல்லாக்காலமும் நடக்கக்கடவதாயிருக்கு மென்கை.

2 'கந்தல் கழிந்த அநந்தரத்திலும் 3 ஸ்வபோக்த்ருத்வ உதயம் உண்டாமோ?' என்ன, அருளிச்செய்கிறார்

சூ —(கஅச) "மருந்தே நங்களபோகமகிழ்ச்சிக்கு" என்று நின்றதிறே

த்வயப்ரகரணம் முற்றிற்று
பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்

---

(வ்யா) ' "மருந்தே நங்களபோகமகிழ்ச்சிக்கு" என்றுநின்றதிறே' என்று அதாவது - உன்னுடைய அநுபவத்தாலே எங்களுக்கு வரும் ஆநந்தத்துக்கு ஸ்வபோக்த்ருத்வபுத்தியை விளைத்து, ஸ்வரூபத்தை அழியாதபடி 4 ஸாத்மிப்பிக்கும் 5 பேஷஜமானவனே! என்று நித்யஸூரிகள்பேசும் பாசுரமாகச் சொல்லாநின்றதிறே யென்கை. ஆகையால், அவ்விஷய வைலக்ஷண்ய ப்ரயுக்தமாய் வரும் ஸ்வபோக்த்ருத்வபுத்தி அங்கும் விளைகையாலே, இப்பதத்தில் ப்ரார்த்தனை என்றும் உண்டு என்னுமிடம் வித்த மென்றதாயிற்று. ஆகையிறே முமுக்ஷு லக்ஷணம் சொல்லுகிறவிடத்திலே (கருள) "நமஇத்யேவ வாதிந:" [நமஇதயேவவாதிந:] என்றது.

ஆக, புருஷகாரத்தையும், 6 தந்நித்யயோகத்தையும், 7 தத்தத்பாவிதமான வாத்ஸல்யாதி குணங்களையும், அந்தக் குணப்ரகாசகமான திவ்யமங்கள விக்ரஹத்தையும், குணவிக்ரஹ விசிஷ்ட வஸ்துவினுடைய உபாயத்வத்தையும், அவ்வுபாய ஸ்வீகாரத்தையும், தத்பலமான கைங்கர்யத்துக்கு ப்ரதிஸம்பந்தி ஒருமிதுன மென்னுமத்தையும், அவ்வஸ்துவினுடைய ஸர்வசேஷித்வத்தையும், தத்விஷய கைங்கர்யத்தையும், கைங்கர்யவிரோதி நிவ்ருத்தியையும் சொல்லிற்றாயிற்று.

த்வயப்ரகரண வ்யாக்யானம் முற்றிற்று
பெரியஜீயர் திருவடிகளே சரணம்

1 ப்ராப்யபூமி பரமபதம் 2 கந்தல் - ப்ரக்ருதிஸம்பந்தம் 3 ஸ்வபோக்த்ருத்வம் - பகவத்ஸௌந்தர்யத்தாலும் கைங்கர்யத்தாலும் உண்டாகும் மகிழ்ச்சியை யநுபவிப்பவனென்கை 4 ஸாத்மிப்பிக்கும் - ஸ்வபோக்த்ருத்வபுத்தி வரவொட்டாமல் செய்யும் 5 பேஷஜம் மருந்து 6 தந்நித்யயோகம் - லக்ஷ்மியின் நித்யமான சேர்த்தி 7 தத உத்பாவிதம் - அந்தலக்ஷ்மியால் (எம்பெருமான் சீறறங்கொள்ளும்போது) உண்டாக்கப்படுவது

ஸ்ரீ

# முமுக்ஷுப்படி

## சரமஸ்லோகப்ரகரணம்

### வ்யாக்யாந அவதாரிகை

---

மத்யரஹஸ்யமான த்வயத்தினுடைய அர்த்தத்தை அருளிச்செய்த அநந்தரம், அதில் பூர்வவாக்யத்தில் சொல்லுகிற உபாயவரணம் 1 ஸர்வேஸ்வரன் தானே விதிக்கையாலே ததபிமதமென்னுமத்தையும் வரணாங்கமான ஸாதநாந்தர பரித்யாகத்தையும் 2 வரணத்தில் ஸாதநத்வபுத்திராஹித்யத்தையும் 3 ஸ்பஷ்டமாகப் பூர்வார்த்தத்தாலே ப்ரதிபாதிக்கையாலும், உத்தரவாக்யத்தில் சொல்லுகிற கைங்கர்யத்துக்குப் 4 பூர்வபாவியான ப்ராப்திப்ரதிபந்தகஸகலபாப விமோசநத்தையும் உத்தரார்த்தத்தாலே ஸ்பஷ்டமாக ப்ரதிபாதிக்கையாலும், த்வயத்துக்கு விவரணமாய்ப் 5 பஞ்சம வேதஸாரபூத கீதோபநிஷத் தாத்பர்யமாய்ச் சரமரஹஸ்யமாயிருந்துள்ள சரமஸ்லோகத்தினுடைய அர்த்தத்தை ஸம்ஸயவிபர்யயமற அருளிச்செய்கிறார்.

இதில் அர்த்தங் கேட்கைக்காக விறே, எம்பெருமானார் பதினெட்டுப்பட்டாயம் திருக்கோட்டியூர்நம்பி பக்கல் எழுந்தருளிற்று.

நம்பிதாமும் இதில் அர்த்தத்தினுடைய கௌரவத்தையும் இதுக்கு அதிகாரிகள் இல்லாமையையும் பார்த்திறே, இவருடைய ஆஸ்திக்ய ஆர்த்தி பரீக்ஷார்த்தமாகப் பலகால் நடந்து துவளப்பண்ணிச் சூளுறவுகொண்டு 6 மாஸோபவாஸங்கொண்டு அருமைப்படுத்தி அருளிச்செய்தருளிற்று

---

1 ஸர்வேஸ்வரன் தானே விதிக்கையாலே - வேறு புருஷனைக் கொண்டு சொல்லுவியாமல் விபவாவதாரமான க்ருஷ்ணனாய் வந்து தானே 'மாமேகம் ஸரணம் வ்ரஜ' என்று விதித்தலாலே ததபிமதம் - அந்தப் பகவானுக்கு இஷ்டமானது 2 வரணத்தில் ஸாதநத்வபுத்தி ராஹித்யம் - எம்பெருமானை உபாயமாக வரிக்கும்போது, அவ்வெம்பெருமான்தான் உபாயமென்று எண்ணுமவ் அவ்வெம்பெருமானைப் பற்றுவது உபாயமென்று நினைக்கிற நினைவு தவிர்கை, 3 ஸ்பஷ்டமாக - குறிப்புப்பொருளாகத் தோற்றுவிக்காமல் ஸப்தஸக்தியாலேயே 4 பூர்வபாவி - முன்னே வரக்கூடியது 5 பஞ்சமவேதம் - ஸ்ரீ மஹாபாரதம் 6 மாஸோபவாஸங் கொண்டது - எம்பெருமானார் மூலமாகக் கூரத்தாழ்வானைப் பெண்க

1 நிஷ்க்ருஷ்ட ஸத்வநிஷ்டனாய், 2 பரமாத்மநிரக்தனாய், அபராத்மநி வைராக்யமுடையனாய், பரமாத்மபரதந்த்ரனாய், 3 பகவத் வைபவம் ஶ்ருதமானால் அது உபபந்நமென்னும்படியான 4 விஸ்ரம்பாஹுள்யமுடையனாய், ஆஸ்திகஅக்ரேஸரனாயிருப்பானொருவனுண்டாகில் அவன் இந்த ஶ்லோகார்த்தஶ்ரவண அநுஷ்டானத்துக்கு அதிகாரி ஆகையாலே, அதிகாரிதுர்லபத்தாலும் அர்த்தகௌரவத்தாலும் இத்தை வெளியிடாதே மறைத்துக்கொண்டு போந்தார்கள், எம்பெருமானாருக்கு முன்புள்ளார், ஸம்ஸாரிகள் துக்கத்திகண்டு பொறுக்க மாட்டாதபடி க்ருபை கரைபுரண்டிருக்கையாலே, அர்த்தத்தின் சீர்மைபாராதே அநர்த்தத்தையே பார்த்து வெளியிட்டருளினார், எம்பெருமானார். 5

அப்படி உபதேசித்துவிடுகிறமாத்ரமன்றிக்கே, இவ்வர்த்தத்தை எல்லாரும் அறிந்து உஜ்ஜீவிக்கவேணும் என்னும் பரமக்ருபையாலேயிறே, இதுதன்னைப் பலப்ரபந்தங்களிலும் ஸங்க்ரஹ விஸ்தரரூபேண இவர் அருளிச்செய்தது மற்றுள்ள ப்ரபந்தங்கள் எல்லாவற்றிலும்போலன்றிக்கே ஸ்த்ரீபாலர்களுக்கும் அதிகரிக்கலாம்படி தெளிய அருளிச்செய்தது, இப்ப்ரபந்தத்திலேயிறே.

அவதாரிகை முற்றிற்று

---

இதில் ப்ரதமத்திலே இந்த ஶ்லோகார்த்தத்தினுடைய கௌரவத்தை எல்லாருடைய நெஞ்சிலும் படுத்துகைக்காக இதுதனக்குச் சரமஶ்லோகமென்று திருநாமமாகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார்

**மூ —(௧௮௫) கீழே சிலஉபாயவிஶேஷங்களை உபதேஶிக்க, அவை துஶ்ஶகங்களென்றும் ஸ்வரூபவிரோதிகளென்றும் நினைத்து ஶோகாவிஷ்டனான அர்ஜுநனைக் குறித்து அவனுடைய ஶோகநிவ்ருத்யர்த்தமாக இனி இதுக்கு அவ்வருகில்லை யென்னும்படியான சரமோபாயத்தை அருளிச்செய்கையாலே, சரமஶ்லோகமென்று இதுக்குப் பேராயிருக்கிறது.**

---

1 நிஷ்க்ருஷ்ட ஸத்வநிஷ்டன் - சுத்தஸத்வகுணநிஷ்டன் 2 பரமாத்மநி ரக்தன் - பரமாத்மாவினிடத்தில் ப்ரீதியுள்ளவன் 3 பகவத்வைபவம் ஶ்ருதமானால் - பகவானுடைய வைபவங் கேட்கப்பட்டால், 4 விஸ்ரம்பாஹுள்யம் - மிக்க நம்பிக்கை 5 இதனால்தான் எம்பெருமானாரைக் க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யரென்பது

(வயா) 'கீழே சில உபாயவிசேஷங்களை' என்று தொடங்கி அதாவது - இந்தச்லோகத்துக்கு கீழே அநேகாத்யாயங்களிலே கர்ம ஜ்ஞாநாதிகளான சில உபாய விசேஷங்களை 1 ஸ்வப்ராப்திலக்ஷண மோக்ஷஸாதநமாக விஸ்தரேண உபதேசித்தருளக்கேட்டு, 2 காயக்லேச ரூபமாகையாலும் இந்த்ரியஜயம் அரிதாகையாலும் 3 ஸாவதாநமாகச் சிரகாலம் ஸாதிக்கவேண்டி யிருக்கையாலும் அவை அநுஷ்டிக்க 4. அசக்யங்களென்றும், 5 ஸ்வசரீரத்வ கத்நாதிகளாலே பகவத் பாதிக்கப்பட்ட பரதந்த்ரமான ஸ்வரூபத்துக்கு ஸ்வயத்நரூபங்களான 6 இவை விரோதிகளென்றும் புத்திபண்ணி, 7 'இவற்றாலே எம்பெருமானைப் பெற என்பது ஒன்றில்லை, இனி, 8 இழந்தேபோமித்தனை யாகாதே' என்கிற 9 சோகத்தாலே ஆவிஷ்டனான அர்ஜுநனைக் குறித்து அவனுடைய அந்த சோகம் போகைக்காக ஸர்வஜ்ஞத்வத் தாலும் ஸ்வரூபாநுரூபதையாலும் இனி இதுக்குமேலில்லையென் னும்படியான 10 சரமமான உபாயத்தை அருளிச்செய்கையாலே, சரம ச்லோகமென்று இதுக்குத் திருநாமமாயிருக்கிறது என்கை.

இனி, இச்சலோகத்துக்கு வாக்யார்த்தம் அருளிச்செய்கிறார்

மூ—(கஅசு) இதில் பூர்வார்த்தத்தாலே அதிகாரி க்ருத்யத்தை அருளிச்செய்கிறான்; உத்தரார்த்தத் தாலே உபாயக்ருத்யத்தை அருளிச்செய்கிறான்

---

1 ஸ்வப்ராப்திலக்ஷண மோக்ஷம் - தன்னை [பகவானை] அடைவதை லக்ஷணமாகவுடைய மோக்ஷம் 2 காயக்லேசம் - உடம்பைவருத்துகை 3 ஸாவதாநமாக - அவதானத்தோடு சிரகாலம் - வெகுகாலம் 4 அசக்யங்கள் - எளிதிற் செய்யக்கூடியவையல்ல 5 ஸ்வசரீரத்வகத்நம் - ஆத்மா தனக்கு [பகவானுக்கு]ச் சரீரமாக விருத்தலைச் சொல்லுகை 6 இவை - கர்மம் ஜ்ஞாநம் பக்தி முதலிய உபாயாந்தரங்கள் 7 இவற்றாலே பெற என்பது ஒன்று இல்லை - இந்தக்கர்மாதிகளால் தான் எம்பெருமானைப் பெறுதல் தகுமென்ற இந்த ஒன்று நாம் கொள்ளத்தக்கதாகவில்லை 8 இழந் தேபோம் இத்தனை - இழந்தேதீருமென்கிற இவ்வளவேயுள்ளதென்றபடி. இழந்தேபோமென்கிறதுக்குக் கர்த்தா இவ்வாத்மாவென்பது தன்மையைப் படர்க்கையாகச் சொன்னது 9 சோகத்தாலே ஆவிஷ்டன் - சோகத்தாலே வ்யாபத்தனானவன் 10 சரமமான உபாயம் - கடைசியான உபாயம் சரமச் லோக மென்பது - கடைசியிற் கூறப்பட்ட ச்லோகமென்பது பற்றிவந்த பெய ரன்று, எல்லாவுபாயங்கட்கும் சரமத்திற் கூறப்பட்ட உபாயத்தைத் தெரி விப்பதால் வந்த பெயர்

(வ்யா) 'இதில் பூர்வார்த்தத்தாலே' என்று தொடங்கி. அதாவது - [1] ஆத்த்வயார்த்தமான இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தத்தாலே இவ்வுபாயத்துக்கு அதிகாரியானவன் செய்யும் அம்சத்தை அருளிச்செய்கிறான், உத்தரார்த்தத்தாலே உபாயபூதனான தான் இவனுக்குச் செய்யும் அம்சத்தை அருளிச்செய்கிறானென்கை.

'அதிகாரிக்ருத்யமாவது எது?' என்ன, அருளிச்செய்கிறார்.

சூ — (௧௮௭) அதிகாரிக் க்ருத்யமாவது - உபாய பரிக்ரஹம்.

(வ்யா) 'அதிகாரிக்குக் க்ருத்யமாவது-உபாயபரிக்ரஹம்' என்று. அதாவது-அதிகாரியானவனுக்கு இங்குச் செய்யத்தக்கது இவ்வுபாயத்தை ஸ்வீகரிக்கையென்கை.

'ஆனால், அவ்வளவை விதியாதே உபாயாந்தரபரித்யாகஞ் சொல்லுவானென்?' என்ன, அருளிச்செய்கிறார்.

சூ — (௧௮௮) அத்தை ஸாங்கமாக விதிக்கிறான்.

(வ்யா) 'அத்தை ஸாங்கமாக விதிக்கிறான்' என்று. அதாவது - அந்த உபாயஸ்வீகாரத்தை [2] உபாயாந்தர பரித்யாகமாகிற அங்கத்தோடேகூட விதிக்கிறானென்கை.

(௧௫௮) "ப்ரக்ஷால்ய பாதாவாசாமேத் ஸ்நாத்வா விதிவதாசம்யேத் । ஸக்திகவாகக்ரம்பார்வேத்யாத் த்யாத்வா தேவம் ஜபேந்நரம் ॥" [ப்ரக்ஷால்ய பாதாவாசாமேத் ஸ்நாத்வா விதிவதாசம்யேத் - ஸக்திகவாகக்ரம்பார்வேத்யாத் த்யாத்வா தேவம் ஜபேந்நரம்] என்று ஆசமநாதிகளுக்கு அங்கமாகச் சொன்ன பாதப்ரக்ஷாளநாதிகளையொழிய அவை அநுஷ்டிக்கவொண்ணாதாப்போலே, இங்கும் ல்யப்ப்ரத்யயத்தாலே அங்கமாகச் சொல்லுகிற உபாயாந்தரத்யாகத்தையொழிய ஸ்வீகாரம் அநுபபந்நம் என்னுமிடம் ஸித்தமிறே. ஆகை

---

1 ஆத்த்வயார்த்தகம் - பூர்வார்த்தம் உத்தரார்த்தம் என்னும் இரண்டு அர்த்தங்களின் வடிவாக இருப்பது. 2 உபாயாந்தர பரித்யாகம் - வேறு உபாயங்களை அடியோடுவிடுகை. ஆகிஞ்சந்ய ஸித்திக்காக இதுவேணும். பகவானாகிற உபாயத்தை ஸ்வீகரித்தலால், அநந்யகதித்வம் ஸித்திக்கும்.

(வ்யா.) 'ஸர்வதர்மாந்' என்று அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், 'எல்லாத் தர்மங்களையும்' என்று.

அதுதான் தர்மமும் பஹுவசநமும் ஸர்வஶப்தமுமாய் த்ரிப்ரகாரமாயிருக்கையாலே இம்மூன்றுக்கும் அர்த்தம் அருளிச்செய்வதாக ப்ரதமம் தர்மலக்ஷணத்தை அருளிச்செய்கிறார்.

**மூ — (௧௧௨) தர்மமாவது - பலஸாதநமாயிருக்குமது.**

(வ்யா.) 'தர்மமாவது-[1] பலஸாதநமாயிருக்குமது' என்று தர்மஶப்தம் [2] த்ருஷ்டபலஸாதநத்திலும் [3] வ்யாப்தமாகையால் அத்தை வ்யாவர்த்திக்கிறார்.

**மூ — (௧௧௩) இங்குச் சொல்லுகிற தர்மஶப்தம் த்ருஷ்ட பலஸாதநங்களைச் சொல்லுகை யன்றிக்கே, மோக்ஷபலஸாதநங்களைச் சொல்லுகிறது.**

(வ்யா.) 'இங்குச்சொல்லுகிற தர்மஶப்தம்' என்று தொடங்கி. அதாவது-பூர்வோபாயங்களத்தனையும் உபதேஶிக்கிறபோதே த்ருஷ்ட பல ஸாதநங்கள் [4] வ்யாவ்ருத்தங்களாகையாலும், மோக்ஷோபாயங்களை உபதேஶித்து வருகிற ப்ரகரணமாகையாலும், இவ்விடத்திற் சொல்லுகிற தர்மஶப்தம் புத்ர பஶ்வந்நாத்யைஹிகமாயும் ஸ்வர்க்காத்யாமுஷ்மிகமாயும் இருந்துள்ள த்ருஷ்டபலங்களுக்கு ஸாதநங்களானவற்றைச் சொல்லுகை யன்றிக்கே, பகவத்ப்ராப்திரூபமான மோக்ஷ பலத்துக்கு ஸாதநமாயுள்ளவற்றைச் சொல்லுகிறதென்கை.

இனிமேல், பஹுவசநார்த்தத்தை அருளிச்செய்கிறார்.

**மூ — (௧௧௪) அவைதான் ஶ்ருதிஸ்ம்ருதி விஹிதங்களாய்ப் பலவாயிருக்கையாலே பஹுவசநப்ரயோகம் பண்ணுகிறது.**

---

1 பலஸாதநம் - பலனைப் பெற உபாயமானது. 2. த்ருஷ்டபலம் - கண்ணாற்காணக் கூடிய புத்திர பசுக்கள் உணவுகள் முதலியன; ஸ்வர்க்கமும் இதனில் அடங்கும். 3 வ்யாப்தம் - வ்யாபிக்கை; அத்ருஷ்டபல ஸாதநங்களைக் காட்டுவதல்லாமல் தர்மம் த்ருஷ்டபலசாதநங்களையும் காட்டவல்லது என்றபடி. 4 வ்யாவ்ருத்தங்கள் - வேறுபடுத்தப்பட்டவை.

(வ்யா) 'அவைதான்' என்று தொடங்கி. அதாவது-அந்த மோக்ஷஸாதநங்கள்தாம் [1] உபப்ரும்ஹ்ய உபப்ரும்ஹணங்களாயிருந்துள்ள ஶ்ருதி ஸ்ம்ருதிகளாலே [2] விஹிதங்களாய்க்கொண்டு அநேகங்களாயிருக்கையாலே 'தாமாந்' என்று பஹுவசந ப்ரயோகம் பண்ணுகிறதென்கை.

'அப்படியிருந்துள்ளவைதாம் எவை?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ—(கசரு) அவையாவன-கர்மஜ்ஞாந பக்தியோகங்களும், அவதாரரஹஸ்யஜ்ஞாநம் புருஷோத்தமவித்யை தேஶவாஸம் திருநாமஸங்கீர்த்தநம் திருவிளக்கெரிக்கை திருமாலையெடுக்கை தொடக்கமான உபாயபுத்த்யா செய்யுமவையும்**

(வ்யா). 'அவையாவன' என்று தொடங்கி. அதாவது - கீழ்ப் பலகாகச் சொல்லப்பட்ட அவையாவன - (கருக) "கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய: - தஸ்மாதஸக்தஸ் ஸததம் கார்யம் கர்ம ஸமாசர" [கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய: - தஸ்மாதஸக்தஸ் ஸததம் கார்யம் கர்ம ஸமாசர] என்று [3] ஸ்வதந்த்ர ஸாதநமாக உக்தமான கர்மயோகமும், (கசு0) "ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே" [ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே] (கசுக) "நஹி ஜ்ஞாநேந ஸத்ருஶம் பவித்ரமிஹ வித்யதே - ஜ்ஞாநாக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதேऽர்ஜுந" [நஹி ஜ்ஞாநேந ஸத்ருஶம் பவித்ரமிஹ வித்யதே - ஜ்ஞாநாக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதேத்தா] என்று சொல்லப்பட்ட [4] கர்மஸாத்யமான ஜ்ஞாநயோகமும், (கசுஉ) "பக்த்யா த்வநந்யயா ஶக்ய:". [பக்த்யா த்வநந்யயா ஶக்ய:] (கசரு) "[illegible]

---

1 ஸ்ம்ருதி முதலியவற்றால் உபப்ரும்ஹணஞ் செய்யப்படவேண்டியதாகையால், வேதம் உபப்ரும்ஹ்ய மெனப்படும், வேதத்தின் பொருளைத் தெளிவாக விரிப்பதனால் ஸ்ம்ருதிகள் உபப்ரும்ஹண மெனப்படும் உபப்ரும்ஹணம் - வளர்ப்பது 2 விஹிதங்கள் - விதிக்கப்பட்டன 3 ஸ்வதந்த்ரஸாதநமாக உக்தமான - அங்கமாக இராமல் தானே ஸாதநமென்று சொல்லப்பட்டுள்ள கர்மம் ப்ரதாநஸாதநமாக இருக்கும்போது ஜ்ஞாநபக்திகள் உத்தராங்கமாகவரும் 4 கர்ம ஸாத்யமான ஜ்ஞாநயோகம் - கர்மத்தைப் பூர்வாங்கமாகக்கொண்டு ஸாதிக்கப்பட்டத்தக்கதான ஜ்ஞாநயோகம் இதற்குப் பக்தி உத்தராங்கமாக வரும்

க்ஷு:" [மந்மநாபவமத்பக்த:] இத்யாதிகளாலே சொல்லப்பட்ட 1 காம ஜ்ஞாநஸஹக்ருதமான பக்தியோகமும் ஆகிற இவையும், (௧௧௪) "ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத: | த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந" [ஜந்மகர்மசமே திவ்யம் ஏவம்யோ வேத்தி தத்த்வத:—த்யக்த்வாதேஹம்புநர்ஜந்ம நைதிமாமேதிஸோர்ஜுந] என்று விரோதிநிவ்ருத்திபூர்வகமான பகவத்ப்ராப்திக்கு ஸாதநமாகச் சொல்லப்பட்ட 2 அவதார ரஹஸ்யஜ்ஞாநமும், (௧௧௫) "ஏதத் புத்த்வா புத்திமாந் ஸ்யாத் க்ருதக்ருத்யஶ்ச பாரத" [ஏதத்புத்த்வா புத்திமாநஸ்யாத் க்ருதக்ருத்யஶ்சபாரத] என்று அபிமத பலலாபத்தாலே க்ருதக்ருத்யனாக்கும் என்கிற புருஷோத்தமவித்யை (௧௧௬) "தேஶோऽயம் ஸர்வகாமதுக்" [தேஶோயம் ஸர்வகாமதுக்] என்று 3 ஸர்வகாமபலப்ரதமாகச் சொல்லுகிற புண்யக்ஷேத்ர வாஸம் (௧௧௭) "ஸர்வபாபவிஶுத்தாத்மா யாதி ப்ரஹ்ம ஸநாதநம்" [ஸர்வபாப விஶுத்தாத்மா யாதிப்ரஹ்மஸநாதநம்] என்று ஸர்வபாபவிமோசந பூர்வகமான பகவத்ப்ராப்தியைப் பலமாகச் சொல்லுகிற திருநாமஸங்கீர்த்தநம் (௧௧௮) "க்ருதேந வாऽத தைலேந தீபம் யோ ஜ்வாலயேந்நர: | விஷ்ணவே விதிவத்பக்த்யா தஸ்ய புண்யபலம் ஶ்ருணு || விஹாய ஸகலம் பாபம் ஸஹஸ்ராதித்யஸந்நிப: | ஜ்யோதிஷ்மதா விமாநேந விஷ்ணுலோகே மஹீயதே" [க்ருதேநவாத தைலேந தீபம்யோஜ்வாலயேந்நர:—விஷ்ணவே விதிவத்பக்த்யா தஸ்ய புண்யபலம்ஶ்ருணு - விஹாயஸகலம்பாபம் ஸஹஸ்ராதித்ய ஸந்நிப:—ஜ்யோதிஷ்மதா விமாநேந விஷ்ணுலோகே மஹீயதே] என்று பாபநிவ்ருத்திபூர்வகமான பகவத்ப்ராப்திக்கு ஸாதநமாகச் சொல்லப்படுகிற திருவிளக்கெரிக்கை அப்படி விரோதிநிவ்ருத்தி பூர்வகபகவத்ப்ராப்திஸாதநமாகச் சொல்லப்படும் திருமாலையெடுக்கை முதலாக ஸாதநபுத்த்யா செய்யப்படுமவையும் என்கை

---

1 காமஜ்ஞாநஸஹக்ருதமான - காமஜ்ஞாநங்களை ஸஹாயமாக [அங்கமாக]க் கொண்ட 2 புருஷோத்தமவித்யையாவது - பகவான் க்ஷரம் அக்ஷரம் என்று முறையே சொல்லப்படுகிற பத்தமுக்தர்களை விபூதியாகவுடையனாய்த் தான் ஹேயகுணங்களுக்கு மாறான கல்யாணகுணங்களைப் பெற்றிருத்தலால் தன்னுடைய விபூதியான அந்தப் பத்தமுக்தர்களைக்காட்டிலும் வேறுபட்டு மிகவும் ஶ்ரேஷ்டனாகிய புருஷோத்தமனென்னப்படுவானென்று பகவானை ஸாக்ஷாத்கரிக்கை 3 ஸர்வகாம பலப்ரதம் - ஸமஸ்தமான இஷ்டபலங்களைத் தருவது.

இனி, ஸர்வஶப்தார்த்தத்தை அருளிச்செய்கிறார்.

ஸூ—(௧௧௬) ஸர்வஶப்தத்தாலே அவ்வவ ஸாதந விஶேஷங்களை அநுஷ்டிக்குமிடத்தில் அவற்றுக்கு யோக்யதாபாதகங்களான நித்யகர்மங்களைச் சொல்லுகிறது.

(வ்யா) 'ஸர்வஶப்தத்தாலே' என்று தொடங்கி. அதாவது—தர்ம விஶேஷணமான ஸர்வஶப்தத்தாலே பஹுவசநாந்தமான அவ்வவ ஸாதநவிஶேஷங்களை அநுஷ்டிக்கும் இடத்தில் (௧௬௧) "ஸந்த்யாஹீநோঽஶுசிர்நித்யம் அநர்ஹஸ் ஸர்வகர்மஸு" [ஸந்த்யாஹீநோঽஶுசிர்நித்யம் அநர்ஹஸ் ஸர்வகர்மஸு] என்கிறபடியே அயோக்யனாகாமல், தன்னை அநுஷ்டிக்கையாலே அவற்றுக்கு யோக்யதையை யுண்டாக்கிக் கொடுக்கும் ஸந்த்யாவந்தந 1 பஞ்சமஹாயஜ்ஞாதிகளான நித்யகர்மங்களைச் சொல்லுகிறதென்கை.

உக்தத்தை நிகமிக்கிறார்.

ஸூ—(௧௧௭) ஆக, ஶ்ருதிஸ்ம்ருதி சோதிதங்களாய நித்யநைமித்திகாதி ரூபங்களான கர்மயோகாத்யுபாயங்களை என்றபடி.

(வ்யா) 'ஆக' என்று தொடங்கி. அதாவது—ஆக, கீழ்ச்சொன்ன எல்லாவற்றாலும் (௭௦) "சோதநாலக்ஷணோঽர்த்தோ தர்ம:" [சோதநாலக்ஷணோঽர்த்தோ தர்ம:] என்று சோதநையாகிற விதிவாக்யத்தை ப்ரமாணமாக வுடைத்தான அர்த்தம் தர்மம் என்கையாலே, ஶ்ருதிஸ்ம்ருதிகளாகிற ப்ரமாணங்களாலே விதிக்கப்பட்டுள்ளவையாய நித்ய நைமித்திகம் முதலானவற்றை வடிவாக வுடைத்தான கர்மயோகம் தொடக்கமான உபாயங்களை யென்றபடி யென்கை.

ஸ்வரூபவிருத்தத்வாத் அதர்மமாகச் சொல்லவேண்டுமவற்றைத் தர்மம் என்கிறதுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார்.

1 பஞ்சமஹாயஜ்ஞங்களாவன - தேவயஜ்ஞம், ருஷியஜ்ஞம், பித்ருயஜ்ஞம், மநுஷ்யயஜ்ஞம், பூதயஜ்ஞம் என்பவை. தேவயஜ்ஞம் - தேவதைகளைக் குறித்து யாகம்பண்ணுகை, ருஷியஜ்ஞம் - வேதமோதுகை, பித்ருயஜ்ஞம் - பித்ருக்களுக்குத் தர்ப்பணஞ்செய்கை, மநுஷ்யயஜ்ஞம் - அதிதிகட்கு விருந்திடுகை, பூதயஜ்ஞம் - ஜீவப்ராணிகட்குப் பலியிடுகை. ஆதி சப்தத்தாலே - வைச்வதேவத்தைச் சொல்லுகிறது.

ஸூ—(கக௯) இவற்றை, த்யாஜ்யம் என்கிறது - பர மித்த அர்ஜுநனை கருத்தாலே

(வ்யா) 'இவற்றை' என்று தொடங்கி அதாவது - பகவதத்யந்தபாரதந்த்ர்யமான உத்தேஸ்யத்துக்கு விரோதியாயிருக்கை யாலே 1 அதர்மஸப்தவாச்யங்களாகப் ப்ராப்தங்களாயிருக்கிற 2 இவற்றைத் த்யாஜ்யமென்று சொல்லுகிறது, ஸ்வதர்மமான யுத்தத்தை அதர்மம் என்றும் இவற்றைத் த்யாஜ்யம் என்றும் ப்ரமித்த அர்ஜுநனுடைய நினைவாலே யித்தனை யென்கை

ஆக, ப்ரதமபதார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று

அநந்தரம், த்விதீயபதத்தை உபாதாநம் பண்ணுகிறார்

ஸூ—(கககூ) பரித்யஜ்ய

(வ்யா) 'பரித்யஜ்ய' என்று

இதுவும் த்யாகமும் ல்யப்பும் உபஸர்க்கமு மாய்த் த்ரிப்ரகாரமாயிருக்கையாலே, அதில் த்யாகவேஷத்தை முந்துற அருளிச்செய்கிறார்

ஸூ—(உ00) த்யாகமாவது - 3 உக்தோபாயங்களை அநுஸந்தித்து, ஸுக்திகையிலே ரஜதபுத்தி பண்ணுவாரைப் போலேயும் விபரீதஸ்பர்சம்பண்ணுவாரைப்போலேயும் அநுபாயங்களிலே உபாயபுத்திபண்ணினோமென்கிற புத்திவிஸேஷத்தோடே த்யஜிக்கை

(வ்யா) 'த்யாகமாவது' என்று தொடங்கி அதாவது - இவ்விடத்திற் சொல்லுகிற த்யாகமாவது - கேவலம் விடுகை அன்று 'கீழ்ச்சொல்லப்பட்ட உபாயங்களின்படியை அநுஸந்தித்து, ரஜதமல்லாத ஸுக்திகையிலே ரஜதபுத்தி பண்ணுவாரைப்போலேயும் ஸ்வகார்யஸித்திக்கு உடலான ஒருக்கிர்க்கிலே போக்கக்கோலித் தத்விபரீதமான வகை ஆகவாக நினைத்துப் போவாரைப்போலேயும், பகவத்ப்ராப்த்யுபாயாபேக்ஷரான நாம் உபாயமல்லாதவற்றிலே உபாயபுத்தி பண்ணினோம்' என்கிற புத்திவிஸேஷத்தோடே விடுகை யென்றபடி

இனி, உபஸர்க்கார்த்தத்தை அருளிச்செய்கிறார்

---

1. அதர்மஸப்தவாச்யங்கள் - அதர்மமென்று சொல்லாற் சொல்லத்தக்கவை 2 இவற்றை - கர்மயோகாதி உபாயங்களை 3 உக்தஉபாயங்கள் - கீழ்ச்சொல்லப்பட்ட உபாயங்கள்

ஸூ —(௨0௧) 'பரி' என்கிற உபஸர்க்கத்தாலே-பாதகாதிகளை விடுமாபோலே 1 ருசி 2 வாஸனைகளோடும் லஜ்ஜையோடுங்கூட 3 மறுவலிடாதபடி விடவேணுமென்கிறது.

(வ்யா.) 'பரி என்கிற' என்று தொடங்கி. அதாவது-'பரி ஸாகல்யே' என்று ஸாகல்யபரமாகக் கொள்ளுமளவில் அது ஸர்வஶப்தத்திலே உக்தமாகையாலே அபேக்ஷிதமல்லாமையாலே, மிகுதிக்கு வாசகமான பரியென்கிற இந்த 4 உபஸர்க்கத்தாலே (௧௭௧) "ப்ரஹ்மஹத்யா ஸுராபாநம் ஸ்தேயம் குர்வங்கநாகம:" [ப்ரஹ்மஹத்யா ஸுராபாநம் ஸ்தேயம் குர்வங்கநாகம:] என்கிற பாதகங்கள் முதலானவற்றை விடுமளவில் அவற்றில் புநரந்வயத்துக்கு உறுப்பான ருசிவாஸனைகளோடேகூட 'நாம் இதைச் செய்வதே!' என்கிற லஜ்ஜாஸஹிதனாய்க்கொண்டு விடுமாபோலே, (௧௭௨) "அத பாதகபீதஸ்த்வம்" [அத பாதகபீதஸ் த்வம்] என்று தாம் தவத்தை பாதகமாகச் சொன்ன உபாயாந்தரங்களை விடுமளவில் புத்திபூர்வகமாக அவற்றிலே ப்ரவர்த்திக்கைக்கு உறுப்பான ருசியும் அபுத்திபூர்வகமாக மூளுகைக்கு உறுப்பான வாஸனையும் ஆகிற அவற்றோடேகூட 5 'பகவதேகஸாதநைகவேஷமான ஸ்வஸ்வரூபத்துக்கு 6 அத்யந்தவிருத்தமானவற்றை நாம் செய்வதே!' என்கிற லஜ்ஜாஸஹிதனாய்க்கொண்டும் அவற்றில் அந்வயம் வாராதபடி விடவேணுமென்று சொல்லுகிறது என்கை

1 ருசி - புத்திபூர்வகமாக ஒன்றில் இறங்குவதற்குக் காரணமானது. 2 வாஸனை - ஒன்றைச்செய்வதிலே பலகாலமேற்பட்டிருக்கும் பழக்கத்தால் அபுத்திபூர்வகமாக அதன் தொழிலில் மூளக் காரணமானது. 3 மறுவலிடுதல் - மீண்டும் அச்செயலில் சம்பந்தமுண்டாதல். 4 உபஸர்க்கமாவது - வினைக்கு முன்வந்து அதனை விசேஷித்து நிற்பது. 'பரித்யஜ்ய' என்ற இடத்தில், 'த்யஜ்' என்கிற தாதுவுக்கு [வினைக்கு] முன்வந்து அதனை விசேஷிக்கிறதால், 'பரி'-உபஸர்க்கமாம். இந்தப் பரிக்கு - ஸாகல்யம் மிகுதி என்று இருபொருளுண்டு. ஸாகல்யமாவது-ஸகலமுமாகை. ஸாகல்யமென்ற பொருளைக் கொண்டால், ஸகலத்தையும் விட்டு என்று கருத்தாகி, 'ஸர்வதர்மாந்' என்ற இடத்து ஸர்வஶப்தத்தால் கூறியதையே கூறியதாமாதலால் அப்பொருளைவிட்டு, மிகுதி யென்ற பொருளைக் கொள்ளவேணுமென்றபடி. 5 பகவதேகஸாதநைகவேஷம் — பகவதேக - பகவானொருவனையே, ஸாதநதா - உபாயமாகக்கொள்ளுதலையே, ஏகவேஷம் - முக்கியஸ்வரூபமாகவுடைய. 6 அத்யந்தவிருத்தமானவற்றை - மிகவும் மாறுபட்டனவான உபாயாந்தரங்களை

இனி, 'லய்ப' ஆத்தத்தை அருளிச்செய்கிறார்

சூ—(உ0உ) லய்பபாலே, "ஸ்நாத்வாபுஞ்ஜீத" என்னுமாபோலே உபாயாந்தரங்களைவிட்டே பற்றவேணும் என்கிறது

(வ்யா.) 'லய்ப்பாலே' என்று தொடங்கி அதாவது - 'த்யஜ்ய' என்கிற 1 லய்ப்பாலே (களஙு) "ஹு க்ஷாவாநாராயணம்வ்ரேத்" [புக்த்வா சாந்த்ராயணமசரேத்] என்னுமாபோலன்றிக்கே, (களச) "ஸ்நாத்வா ஹுஞ்ஜீத" [ஸ்நாத்வாபுஞ்ஜீத] என்கிற விதி 'புஜிக்குமளவில் ஸ்நானம்பண்ணியே புஜிக்கவேணும்' என்கிற 2 நியமத்தைச் சொல்லுமாபோலே, ஸித்தோபாயத்தைப் பரிக்ரஹிக்குமளவில் த்யாஜ்யமான உபாயாந்தரங்களை த்யஜித்தே பரிக்ரஹிக்கவேணுமென்கிற நியமத்தைச் சொல்லுகிறது என்கை

இப்படி விட்டேபற்றவேணு மென்கிற இதன் கருத்தை அருளிச்செய்கிறார்

சூ—(உ0ங) "சசால சாபஞ்ச முமோச வீர:" என்கிறபடியே இவை அநுபாயங்களானமாத்ர மன்றிக்கே காலகட்டு என்கிறது

(வ்யா) 'சசால' என்றுதொடங்கி அதாவது-(களரு) "யோவஜ்ரபாதாஶநிஸந்நிபாதாந சுக்ஷோபேநாபிசசாலராஜா। ஸ்ராமபாணாபிஹதோ ப்ருஶார்த்த: சசாலசாபஞ்ச முமோசவீர:" [யோவஜ்ரபாதாஶநிஸந்நிபாதாந சுக்ஷுபேநாபிசசாலராஜா—ஸ்ராமபாணாபிஹதோ ப்ருஶார்த்தஸ் சசாலசாபஞ்சமுமோசவீர:] என்கிற ஶ்லோகத்தில் ராவணன் ராம ஶரங்களாலே மிகவும் 3 ஈடுபட்டு நிலை

1 'த்யஜ்ய' என்கிற இடத்தில் வந்துள்ள யகாரம் - லய்ப என்ற விகுதியென்று வடமொழிவ்யாகரணத்தார் லேறப்படும் 2 புஜித்தலென்பது பசியுள்ளவனுக்குத் தானே உண்டாகுமாதலால் விதிக்கவேண்டுவதில்லை, ஆகவே, புஜித்தலேற்பட்டுவிட்டதனால் அதற்கு அங்கமாக ஸ்நானஞ்செய்யவேணுமென்பதைத் தெரிவிப்பதற்காகவே 'ஸ்நாத்வாபுஞ்ஜீத' என்பது வந்துள்ளது. 'புக்த்வா சாந்த்ராயணமசரேத்' என்ற இடத்திலோ சாந்த்ராயணஞ் செய்யவேண்டுமென்பது இந்த விதியினாலேயே யேற்படுதலால், புக்த்வா என்பது சாந்த்ராயணகரணத்துக்குக் காரணமாம் 3 ஈடுபட்டு - அடிபட்டு நிலைகலங்கி - இருந்தவிடம்விட்டு

கலங்கிப் போகப்பார்த்தவளவிலும் கையில் வில்லிருக்குமளவும் பெருமாள் போகவொட்டாமையாலே பின்பு போகட்டவிலலு! கையில் இருந்தபோது 1 ப்ரதிபக்ஷ ஜயத்துக்கு ஸாதநமாகாத மாத்ர மன்றிக்கே (௭௬) “ஶ்ராநுஜாநாமி” [கச்சாநுஜாநாமி] என்று பின்பு பண்ணின அநுமதி. பெருமாள் அப்போது பண்ணக்காணமையாலே போகவு மொண்ணும்படி 2 காலகட்டானமையைச் சொல்லுகிறபடியே, உபாயாந்தரங்களான இவற்றிலே 3 ஈஷத் அந்வயங் கிடக்கிலும் இவை 4 பேற்றுக்கு ஸாதநமாகாதமாத்ர மன்றிக்கே பேற்றுக்கு ப்ரதிபந்தகமாய்த் தலைக்கட்டு மென்றபடி.

இன்னமும், இவற்றில் அந்வயம் இழவுக்கு உடலாமென்னு மதத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்

ஸூ:—(௨0௪) சக்ரவர்த்தியைப்போலே இழக்கைக்குறுப்பு.

(வ்யா) ‘சக்ரவர்த்தியைப்போலே இழக்கைக்குஉறுப்பு’ என்று அதாவது-முன்பே வரபரதானத்தைப் பண்ணிவைத்து இப்போதாக மறுக்கவொண்ணாதென்று 5. ஆபாஸமான ஸத்யதர்மத்தைப் பற்றி நின்று (௭௭) “ராமோவிக்ரஹவாந்தர்ம:” [ராமோவிக்ரஹவாந்தர்ம:] என்கிற பெருமாளோடே கூடி வாழ இருந்த பேற்றை யிழந்த சக்ரவர்த்தியைப்போலே ஆபாஸமான உபாயாந்தரங்களிலே அந்வயித்து நிற்கையாகிறது-(௭௮) “க்ருஷ்ணம்தர்மம் ஸநாதநம்” [க்ருஷ்ணம தர்மம் ஸநாதநம்] என்று ஸநாதநதர்மமான பகவத்விஷயத்தோடே கூடி வாழ்கையாகிற பேற்றை இழக்கைக்கு உறுப்பாயவிடு மென்கை.

இனி, இங்குச்சொன்ன ஸர்வதர்ம பரித்யாகத்தின் கருத்து அறியாதார் சொல்லும் தூஷணத்தைப் பரிஹரிக்கைக்காகத் தத்பக்ஷத்தை 6 உத்க்ஷேபிக்கிறார்

ஸூ—(௨0௫) ஸர்வதர்மங்களையும்விட்டு என்று சொல்லுகையாலே சிலர் ‘அதர்மங்கள் புகுரும்’ என்றார்கள்?

---

1 ப்ரதிபக்ஷஜயம் - சத்ருக்களைஜயித்தல் 2 காலகட்டு - ப்ரதிபந்தகம் தடையாயுள்ளது 3 ஈஷத்அந்வயம் - சிறிது சம்பந்தம் 4 பேற்றுக்கு - புருஷார்த்தத்துக்கு 5 ஆபாஸமான - (தர்மம்போல) மேல்நோக்கில் தோன்றுவதான 6 உத்க்ஷேபிக்கிறார் - கிளப்புகிறார், எடுத்துக்கொள்ளுகின்றார் என்றபடி

(வயா ) 'ஸாவதாமஙகளையும' எனறு தொடஙகி அதாவது - தயாஜயமான தாமநதான 1 'இகம குரு, இதம மாகாரஷீ:' எனறு 2 விதிநிஷேதாதமகமா யிருககையாலே 'ஸாவதாமஙகளையுமவிட்டு' எனறு சொலலுகையாலே 3 விஹிதாநுஷடாநததோபாதி நிஷிததபரிஹாரமும ஒககத தளளுணணு மளவில, அடைதத கதவைத திறநதால 4 நிஹீந பதாாததஙகள புகுருமாபோலே அதாமஙகளான 5 நிஷிதத்பரருவ ததிகள புகுரு மெனறு சிலா சொனனாகளெனனகை அததைப பரிஹரிககிறா

மூ—(உ0சு) அது கூடாது; 'அதாமஙகளைச செய' என்று சொலலாமையாலே.

(வயா ) 'அதுகூடாது அதாமஙகளைச செய எனறு சொலலாமையாலே' எனறு அதாவது - ஸாவதாமஙகளையும விடச்சொனன இததால அதாமஙகள புகுரு மெனகிற இது, ஸமபவியாது, தாமஙகளை விடசசொனன மாதர மொழிய அதாமஙகளைச செயயெனறு சொலலாமையாலே யெனகை

'அதாமநிவருததியும தாமஸபதவாசய மாகையாலே, அததை விடச சொனனால, அதாமததைச செய யெனனுமிடம 6 ஆாததாத உகதமாகாதோ?' எனகிற 7 பரதிவாதயுகதியை அநுவதிககிறா

மூ—(உ0எ) 'தனனடையே சொலலிறறாகாதோ?' எனனில,—

(வயா ) 'தனனடையே சொலலிறறாகாதோ வெனனில' எனறு அதுககு உததரம அருளிசசெயகிறா

மூ—(உ0அ) ஆகாது, தாமஸபதம அதாமநிவருததியைக காட்டாமையாலே

---

1 இதம குரு - இதைசசெய இதம மாகாாஷீ: - இதைசசெயயாதே 2 விதி ஆதமகம - உடனபாடடேவல வடிவானது - நிஷேத ஆதமகம - எதிாமறையேவலவடிவானது 3 விஹித அநுஷடாநதது ஒபாதி - சாஸதிரததில விதிககபபடடவறறை அநுஷடிததலபோலவே நிஷிதத பரிஹாரமும - சாஸதிரததிற செயயவேணடா எனறு நிஷேதிககபபடடுளளவறறை விடடிதலும ஒகக-ஒருசேர 4 நிஹீநபதாாததம - இழிநதபொருள சுவானமபோனறவை 5 நிஷிதத பரவருததிகள-நிஷேதிககபபடட அதாம வயாபாரஙகள 6 ஆாததாத உகதம-கருததுபபொருளாற சொலலபபடடது 7 பரதிவாதி உகதி - பரதிவாயினபேசசு

(வ்யா) 'ஆகாது, தர்மஶப்தம் அதர்ம நிவ்ருத்தியைக் காட்டா மையாலே' என்று அதாவது - 1 தர்மங்களை விடச்சொன்ன இத்தால், 'அதர்மங்களைச் செய்' என்னும் இடம் தன்னடையே சொல்லிற்றா காது, தர்மஶப்தம் 2 அதர்மநிவ்ருத்யாதி அங்கஸஹிதமாய்ப் ப்ரதாந மாயிருந்துள்ள விஹிதாநுஷ்டாநத்தைக் காட்டும் தொழிய, ஸாமாந் யேந அதர்மநிவ்ருத்திமாத்ரத்தைக் காட்டாமையாலே யென்கை

'அதர்மநிவ்ருத்திக்கு தர்மஶப்த வாச்யத்வம் முக்யமாக இல்லை யேயாகிலும், ஸாவஶ்ய 3 ஸாஹித்யத்தாலே தர்மஶப்தம் 4 விஶே ஷணபூதமான இதுதன்னையுங் காட்டாதோ?' என்ன, அருளிச் செய்கிறார்

**சூ —(௨௦௧) காட்டிலும், அத்தை ஒழிந்தவற் றைச் சொல்லிற்று மித்தனை.**

(வ்யா.) 'காட்டிலும்' என்று தொடங்கி அதாவது = அப் படிக் காட்டிற்றாகிலும், அது இவ்விடத்தில் 5 விவக்ஷிதம் அல்லாமை யாலே, அத்தையொழிந்த 6 விஹிதாநுஷ்டாநரூப தர்மங்களானவற் றைச் சொல்லிற்று மித்தனை யென்கை

'இங்ஙன் ஒதுக்குகிறது என்கொண்டு?' என்ன, அருளிச்செய் கிறார்

---

1 தர்மம் - விதித்ததைச் செய்தலும் விலக்கியவற்றைத் தவிர்தலு மென்ன இருவகையாகப் பகுக்கப்பட்டிருந்தாலும், தர்மத்தை விடச்சொன்ன இடத் தில் ப்ரவ்ருத்திரூபமான தர்மத்தைத் தவிரவேணுமென்று கருத்துக்கொள்ள வேண்டுமே யொழிய, நிவ்ருத்திரூபமான தர்மத்தை விடவேணுமென்று கருத்துக் கொள்ளக்கூடாமையினாலும், அப்படி தர்மத்தை விடச்சொன்ன இடத்தில் நிவ்ருத்தி ரூபமான தர்மத்தையும் விடவேணுமென்று கருத்துக்கொண்டால்தான் அதர்ம த்தையும் செய்யுமாறு ஏற்படும். 2 அதர்மநிவ்ருத்யாதி என்ற இடத்திலுள்ள ஆதிபதத்தால், ப்ரவ்ருத்திரூபமான அங்கங்களைக் கொள்ளவேணும். 3 ஸாஹித்யம் - சேர்க்கை 4 விஶேஷணபூதமான இது தன்னையும் - அதர்ம நிவ்ருத்திரூபமான தர்மம் என்று விஶேஷணமிட்டுச் சொல்லப்படுகிற இந்த அதர்மநிவ்ருத்தியையும் 5 விவக்ஷிதம் அல்லாமையாலே - வக்தாவின் கருத் துக்கு இசைந்ததல்லாமையாலே; ஸித்தோபாயம் நிரபேக்ஷமாகக் கார்யம் செய்யவல்லதென்கிறதுக்குக் கொத்தை வாராமைக்காக ப்ரவ்ருத்திரூபமான தர்மம் எதுவும் வேண்டா என்ற கருத்துடன் ஸர்வதர்மான் பரித்யஜ்ய என்று சொல்லப்பட்டதே தவிர, வேறு கருத்தின்றச் சொல்லப்படாமையாலே யென்ற படி. 6 விஹிதாநுஷ்டாநம் - விதித்ததையநுஷ்டித்தல்

மூ—(உகO) தன்னையும் ஈச்வரனையும் பலத்தை யும் பார்த்தால் அவை புகுரவழி இல்லை

(வ்யா) 'தன்னையும்' என்று தொடங்கி அதாவது - ஆத்மா நஷ்டாநம் ஸேஷிக்கு அநிஷ்டம் ஆகையாலே அவனுக்கு அதிசய கரனுமது ஒழிய அநிஷ்டகரனுகை சேராதபடியான ஸ்வரூபத்தை யுடைய தன்னைப் பார்த்தாலும், 1 ஸஹாயாந்தர ஸம்ஸர்க்க அஸஹத்தை யாலே இத்தலையில் ஸ்வயத்நநிவ்ருத்தி ஒழிய ப்ரவ்ருத்தி அம்சத்தில் ஒன்றையும் பொறுத்த உபாயபூதனான ஈச்வரனைப் பார்த்தாலும், இவ னுடைய ப்ரவ்ருத்திக்கு பலம் அவனுடைய ப்ரீதி யாகையாலே தாத ருஸ்யமான பலத்தைப் பார்த்தாலும், இம்மூன்றுக்கும் விருத்தங்களான அவை புகுரவழி இல்லையென்கை ஆகையால், தாம் ஸ்பஷ்டம் அர்த்த நிவ்ருத்தியைக் 2 காட்டிற்றிலும், அத்தை ஒழிந்தவற்றைச் சொல் லிற்றுக் கொள்ளவேணுமென்று கருத்து

ஆக, த்விதீயபதார்த்தத்தை அருளிச்செய்தா ராயிற்று

அநந்தரம் த்ருதீயபதத்தை உபாதாநம் பண்ணுகிறார்

மூ—(உகக) மாம் = ஸர்வரக்ஷகனாய், உனக்குக் கை யாளாய், உன்னிசைவு பார்த்து, உன் தோஷத்தைப் போக்யமாகக் கொண்டு, உனக்குப் புகலாய், நீ சுடுமா போலே சோம்பாரே பிரிக்கும் போதும் விடமாட்டாதே ரக்ஷிக்கிற என்னை

(வ்யா) 'மாம்' என்று அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் 'ஸர்வரக்ஷகனாய்' என்று தொடங்கி அதாவது-'நம்முடைய ரக்ஷணம் இவன் பண்ணுமோ? பண்ணானோ?' என்று ஸம்சயிக்கவேண்டாதபடி ஸர்வருடையவும் ரக்ஷணத்திலே தீக்ஷிதனாய், 'தன்பெருமையையும் நம் சிறுமையையும் பார்த்து நம்மோடு 3 கலப்புஅற்று இருக்குமோ?' என்ன வேண்டாதபடி (கஎக) "ஸேநயோருபயோர்மத்யே ரதம் ஸ்தாபய" [ஸேநயோருபயோர்மத்யே ரதம் ஸ்தாபய] என்று ஏவிக் காரியங்கொள்ளலாம்படி உனக்குக் கையாளாய், உன்னை ரக்ஷிக்கையில்

---

1 ஸஹாயாந்தரஸம்ஸர்க்க அஸஹதை - வேறு ஒரு உதவியின் ஸம்பந்தத்தைப் பொறுமை 2 காட்டிற்றிலும் - மற்றையிடத்திற் காட்டினாலும் இந்த இடத்திலேயென்று வருவித்துக்கொள்க 3 கலப்புஅற்று இருத்தல் - சேராது ஒதுங்கியிருத்தல்.

உண்டான ஙசையாலே (கஅ௦) "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" [ரக்ஷ்யாபேக்ஷாம ப்ரதீக்ஷதே] என்கிறபடியே 1 ரக்ஷ்யபூதனுன உன 2 இசைவுபார்த்து, 'ஙங் குற்றங் கண்டு இகழ்வோர்' என்று அஞ்ச வேண்டாதபடி 3 அஸத்தாந ஸ்நேஹகாருண்யதாமாத்ரமதியாகுலனுன உன்தேக்ஷ்த்தைப் போரயமாகக்கொண்டு, 4 அஶரண்யஶரண்யனுகையாலே நீயும் பிறரும் உனக்குத் தஞ்சமல்லாத தசையில் ஒதுங்க லாம்படியான 5 புகலாய், ஶைத்யமேனவபாவமான ஜலம் 6 ஔஷ்ணயத்தைப் பஜிக்குமாபோலே 7 அபராதக்ஷாமணம் பண்ணி கடிப்பிக்கும் புருஷகாரபூதரே * "தாமரையாளாகிலும் 8 சிதகுரைக்குமேல" என்கிறபடியே குற்றத்தைக்காட்டி அகற்றும்போதும், விட க்ஷமன்ன திகே * "என்னடியார் அது செய்யார்" என்று 9 மறுதலித்து ஒரு தலைநின்று ரக்ஷிக்கும் என்னை என்கை

'மாம்' என்று விபவரூபத்தைக் காட்டுகையாலே, வயாவர்த்திக்கப்படுகிறவற்றை அருளிச்செய்கிறார்

மூ—(உகஉ) இத்தால் பரவ்யூஹங்களையும், தேவதாந்தர்யாமித்வத்தையும் தவிர்க்கிறது.

(வயா) 'இத்தால்' என்று தொடங்கி அதாவது-'என்னை' என்று அவதரித்துக் கண்ணுக்கு இலக்காய் அணுகிநிற்கிற தன்னை 10 வரணீயனுகச் சொன்ன இத்தாலே 11 தேஶவிப்ரகருஷ்டதையாலே காண வுங்கிட்டவும் ஒண்ணுதபடியிருக்கிற பரவ்யூஹங்களையும் 12 அஸாதா

1 ரக்ஷ்யபூதன் - ரக்ஷிக்கப்படத்தக்கவனுனவன் 2 இசைவு சம்மதம். 3 அஸத்தாந - ஸ்நேஹ காருண்யங்களுக்கு இடமல்லாவிடத்தில் (ஶத்ருபக்ஷத்தில்), ஸ்நேஹ காருண்ய - ஸ்நேஹமென்ன கருணையென்ன இவற்றாலே, தாம - க்ஷத்ரிய தாம(மாகிய ஶத்ருவத்தகில,) அத்தம தியா - அதாமமென்கிற புத்தியினலே, ஆகுலன - வியாகுலப்பட்டவன் 4 அஶரண்யஶரண்யன் - தஞ்சமாக எவரையும் இல்லாதவர்கட்குத் தஞ்சமாகுபவன் 5 புகல - தஞ்சம் 6 இதுஎம்பெருமானுடையகருபாகுணத்தைப்பற்றச்சொல்லுகின்றது ஔஷ்ணயத்தைப் பஜித்தல் - சுடுந்தன்மையையடைதல் 7. அபராதக்ஷாமணம் பண்ணி கடிப்பிக்கும் - குற்றத்தைப் பொறுக்கும்படிசெய்து (பகவானேடு) சேர்ப்பிக்கிற 8 சிதகு-குற்றம் 9 மறுதலித்து-எதிரிட்டு, ஒருதலைநின்று - ஒருபக்ஷமாகஇருந்து 10 வரணீயன் - ஶரணமாக வரிக்கத் தகுந்தவன் 11 தேஶவிப்ரகருஷ்டதை - தூரமான தேஶத்திலிருப்பவனுகை யென்றபடி 12 அஸாதாரணவிக்ரஹயுக்தம - தனக்கு என்று விஶேஷமாகவுள்ள திருமேனியோடே கூடியது

ரண விக்ரஹயுக்தமன்றிக்கே உபாயாந்தர நிஷ்டர்க்கு உத்தேஸ்ய மாயிருக்கிற அக்நி இந்த்ராதி தேவதாந்தர்யாமித்வத்தையும் 1 வ்யா வர்த்திக்கிறது என்கை.

தர்மங்களையெல்லாம் விட்டுத் தன்னைப் பற்றச்சொல்லுகையாலே 2 பலித்தமானதொரு அர்த்த விசேஷத்தை அருளிச்செய்கிறர்

மூ —(உகக) தர்மஸம்ஸ்தாபநம் பண்ணப்பிறந் தவன்தானே 'ஸர்வதர்மங்களையும் விட்டு என்னைப் பற்று' என்கையாலே ஸாக்ஷாத் தர்மம் தானே யென் கிறது

(வ்யா) 'தர்மஸம்ஸ்தாபநம்' என்று தொடங்கி, அதாவது- (க௮க) "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச து்ஷ்க்ருதாம். தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே" என்கிறபடியே 3 ஸ்வப்ராப்திக்கு உடலான தர்மத்தை ஸ்தாபிப்பதாகப் பிறந்தவன்தானே 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய' என்று 'மோக்ஷஸாதநதயா ஶாஸ்த்ரஸித்தங்களான ஸர்வதர்மங்களையும்விட்டு என்னைப்பற்று' என்று சொல்லுகையாலே, அவை 4 ஸாக்ஷாத் தர்மங்களன்று, 5 ஸ்தாபநீயமான ஸாக்ஷாத் தர் மம் (க௮உ) "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" [க்ருஷ்ணம் தர்மம் ஸநாத நம்] என்று ஸநாதநதர்மமான தானே யென்னுமிடம் சொல்லுகிறது என்கை.

'இத்தால் என் சொல்லுகிறது?' என்ன, அருளிச்செய்கிறர்

மூ —(உகச) இத்தால், விட்ட ஸாதநங்களில் ஏற் றஞ் சொல்லுகிறது

(வ்யா) 'இத்தால் விட்ட 6 ஸாதநங்களில் ஏற்றஞ்சொல்லுகிறது' என்று அதாவது-இப்படிச்சொன்ன இத்தால், கீழ் விட்ட ஸாதநங்க ளிற் காட்டில் இந்த ஸாதநத்துக்கு உண்டான ஏற்றஞ்சொல்லுகிறது என்கை

'அதுதான் எது?' என்ன, அருளிச்செய்கிறர்

---

1 வ்யாவர்த்திக்கிறது - தவிர்க்கிறது 2 பலித்தம் - கருத்தாக ஏற்பட் டது 3 ஸ்வப்ராப்திக்கு உடலான தர்மத்தை - தன்னையடைவதற்கு ஸாதன மான தர்மத்தை 4. ஸாக்ஷாத் தர்மம் - தான் நேரே பயனைக்கொடுக்குந் தர்மம். 5 *ஸ்தாபநீயம் - நிலைநாட்டுதற்கு உரியது 6 ஸாதநம் - உபாயம்

ஸூ —(உகரு) அதாவது - ஸித்தமாய், பரமசேதந மாய், ஸர்வஶக்தியுமாய், நிரபாயமாய், ப்ராப்தமாய், ஸஹாயாந்தர நிரபேக்ஷமாயிருக்கை

(வ்யா) 'அதாவது' என்று தொடங்கி இத்தால், கீழ்விட்ட ஸாத நங்களிற் காட்டில் இதற்கு ஏற்றமாவது - 1 சேதநப்ரவ்ருத்தியாலே தன்ஸ்வரூபஸித்தியாம்படியிருக்கையன்றிக்கே 2 ஸநாதந தாமமாகை யாலே ஸித்தமாய், (கஅரு) "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" [யஸ்ஸர்வஜ்ஞ ஸ்ஸர்வவித்] இத்யாதிகளிற் சொல்லுகிற 3 ஸர்வஜ்ஞவிஷயமாகை யாலே பரமசேதநமாய், (கஅச) "பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே" [பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே] என்கிறபடியே 4 ஸர்வ ஶக்தியாய், 5 சேதநஸாத்யமாய், நடுவே அபாயங்கள் புகுருகைக்கு அவ காஶமுண்டாம்படி யிருக்கையன்றிக்கே ஸித்தவஸ்துவா யிருக்கை யாலே நிரபாயமாய், பரதந்த்ரனான இச்சேதநனுடைய ஸ்வரூபத் துக்கு 6 அப்ராப்தமாயிராதே ப்ராப்தமாய், கீழ்ச்சொன்ன பரமசேத நத்வாதிகளாலே ஸஹாயாந்தரநிரபேக்ஷமாயிருக்கை யென்றபடி.

இந்த 7. ஸஹாயாந்தர நிரபேக்ஷத்வத்தை ஸஹேதுகமாக ஸாதிக்கிறார்

ஸூ —(உகசு) மற்றைஉபாயங்கள் ஸாத்யங்களா கையாலே, ஸ்வரூப ஸித்தியில் சேதநனை அபேக்ஷித் திருக்கும், அசேதநங்களுமாய் அஶக்தங்களுமாயிருக் கையாலே கார்யஸித்தியில் ஈஶ்வரனை அபேக்ஷித்திருக் கும் இந்தஉபாயம் அவற்றுக்கு எதிர்த்தட்டா யிருக் கையாலே, இதரநிரபேக்ஷமா யிருக்கும்

(வ்யா) 'மற்றை உபாயங்கள்' என்று தொடங்கி மேல்மூன்று வாக் யத்தாலே அதாவது - இதரவொழிந்தஉபாயங்கள் சேதநப்ரவ்ருத்தி யாலே ஸாதிக்கப்படுமவை யாகையாலே தன்னுடைய ஸ்வரூபஸித்தி

---

1 சேதநப்ரவ்ருத்தி - சேதநனுடைய முயற்சி 2 ஸநாதநதாமம் - பழமையாயுள்ள தாமம் 3 ஸர்வஜ்ஞவிஷயம் - ஸர்வஜ்ஞனான விஷயம் 4 ஸர்வஶக்தி - எல்லாவகையான சக்தியையுமுடையது 5 சேதநனாலே ஸா திக்கப்படுவதாயின இடையில் விக்கினங்களுண்டாகும், சேதநனால் ஸாதிக்கப் படுவதன்றுகையாலே இது விக்கினமற்றது என்றபடி, அபாயம் - விக்கினம். 6 அப்ராப்தம் - தகாதது 7 ஸஹாயாந்தர நிரபேக்ஷத்வம் - வேறொரு துணையை வேண்டாமலிருக்கை

யில் 1 ப்ரவ்ருத்திகரானை சேதநனை அபேக்ஷித்திருக்கும், இவனுக்குச் செய்யவேண்டுமவை அறிகைக்கும் அதுதன்னைச் செய்து தலைக்கட்டுகைக்கும் யோக்யதையில்லாத அசேதநங்களுமாய் அஶக்தங்களுமா யிருக்கையாலே, சேதநனுடைய இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரரூபமான கார்யத்தினுடையவித்தியில் (கஅரு) "ஃபலமத உபபத்தே:" [பலமத உபபத்தே:] என்கிறபடியே 2 பலப்ரதத்வோபயோகியான 3 ஸர்வஶக்தித்வாதி உபபத்தியுடையனான ஈஶ்வரனை அபேக்ஷித்திருக்கும், இந்த உபாயம் விதித்தவை பரமசேதநத்வ ஸர்வஶக்தித்வங்களாலே அவற்றுக்கு எதிர்தட்டா யிருக்கையாலே, அந்யநிரபேக்ஷமாயிருக்கு மென்கை

இனி இப்பதத்திலே ஆஶ்ரயண ஸௌகர்ய ஆபாதகங்களான குணவிஶேஷங்களெல்லாம் ப்ரகாஶிக்கிறபடியை அருளிச்செய்கிறார்

**மூ—(உகள) இதிலே, வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்யங்களாகிற குண விஶேஷங்கள் நேராக ப்ரகாஶிக்கிறது.**

(வ்யா) 'இதிலே' என்று தொடங்கி அதாவது-அர்த்தம்புத்தியாலே தாமத்தினின்றும் நிவ்ருத்தனான அர்ஜுநனுக்குக் குற்றம் பாராதே 4. அபேக்ஷிதார்த்தங்களை அருளிச்செய்கையாலே, வாத்ஸல்யம் ப்ரகாஶிக்கிறது, தன்னுடைய பரத்வத்தைப் பலகாலும் அருளிச்செய்தவளவன்றிக்கே அர்ஜுநன் ப்ரத்யக்ஷிக்கும்படி பண்ணுகையாலே, ஸ்வாமித்வம் ப்ரகாஶிக்கிறது, (கஅசு) "ஹே க்ருஷ்ண ஹே யாதவ" [ஹேக்ருஷ்ணஹேயாதவ] என்று அர்ஜுநன் தானே சொல்லும்படி இவனோடே கலந்து பரிமாறுகையாலே, ஸௌஶீல்யம் ப்ரகாஶிக்கிறது, அப்ராக்ருதமான திருமேனியைக் கண்ணுக்கு இலக்காம்படி பண்ணுகையாலே, ஸௌலப்யம் ப்ரகாஶிக்கிறது என்கை "குணவிஶேஷங்கள்" என்றது, ஆஶ்ரயணத்துக்கு அபேக்ஷிதங்களானவையென்று தோற்றுகைக்காக, 'நேராக ப்ரகாஶிக்கிறது' என்றது, ஸ்பஷ்டமாக ப்ரகாஶிக்கிற தென்றபடி

---

1. ப்ரவ்ருத்திகரான - முயற்சியைச் செய்பவன் 2. பலப்ரதத்வ உபயோகியான - பயனைக் கொடுப்பவனுதற்கு உதவியான ஸர்வஶக்தித்வ என்கிற இடத்திலுள்ள ஆதிஶப்தத்தாலே ஸர்வஜ்ஞத்வாதிகளைக் கொள்ளலாம் 3. உபபத்தி தகுதி, யோக்யதை 4 அபேக்ஷிதார்த்தம் - தேஹாத்மவிவேகம் முதல் ப்ரபத்தி வரையிலும்

இவை எல்லாவற்றிலும் வைத்துக்கொண்டு, மிகவும் அபேக்ஷி தம் ஸௌலப்யமாகையாலே, அவதாரப்ரயுக்தமான ஸௌலப்யத் தளவன்றிக்கே [1] ஸாரத்யேவஸ்தித்தனாய் நிற்கிற ஸௌலப்யாதி ஶயத்தைத் தாத்பர்யத்தமையை அருளிச்செய்கிறார்

ஸூ—(உகஅ) கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க் கயிறும், ஸேநாதூளிதூஸரிதமான திருக்குழ லும், தேருக்குக்கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற் கிற ஸாரத்யவேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான்

(வ்யா) 'கையும் உழவுகோலும்' என்று தொடங்கி. அதாவது— குதிரைகளை ப்ரேரித்து நடத்துகைக்காகத் திருக்கையிலே தரித்த [2] உழவுகோலும், அவற்றை [3] இடவாய் வலவாய்த் திருப்புகைக்காக வும் நிறுத்தருளவேண்டும் இடத்திலே தாங்கி நிறுத்துகைக்காகவும் பிடித்த சிறுவாய்க்கயிறும், திருமுடியில் [4] ஒன்று ஆச்சாதியாமல் நிற் கையாலே ஸேநாதூளியாலே புழுதிபடிந்த திருக்குழலும், *"தேர் கடவிய பெருமான்கனைகழல்" என்கிறபடியே, சாத்தின சிறுசதங் கையும் தானுமாகத் தேருக்குக்கீழே [5] நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்யவேஷத்தை 'என்னை' என்று காட்டுகிறான் என்கை.

ஆக, த்ருதீயபதார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று. அநந்த ரம், சதுர்த்தபதத்தை உபாதாநம் பண்ணுகிறார்

ஸூ—(உககூ) ஏகம்

(வ்யா) ஏகம் என்று அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்

ஸூ—(உஉ0) இந்த ஏகபதம் ஸ்வதந்த்ரப்ரமாணத் தாலே அவதாரணார்த்தத்தைக் காட்டுகிறது.

(வ்யா) 'இந்த ஏகபதம்' என்று தொடங்கி. அதாவது— இவ் வுபாயவிஶேஷத்தைச் சொல்லும் இடங்களிலே பலவிடங்களிலும் [6] அவதாரண ப்ரயோகம் உண்டாகையாலே, உகாரம்போலே இந்த ஏகபதமும் ஸ்தாநப்ரமாணத்தாலே அவதாரணமாகிற அர்த்தத்தைக் காட்டுகிறது என்கை

1 ஸாரத்யே அவஸ்திதன் - தேரையோட்டுதலில் நிலைநின்றவன். 2. உழவுகோல் - குதிரையைத் தூண்டுங்கோல். 3 இடவாய் வலவாய் - இடப்பக்க வலப்பக்கங்களில் 4 ஒன்று ஆச்சாதியாமல் - எதுவும் மறைக்காமல் 5 நாற்றின - தொங்கவிட்ட 6 அவதாரணப்ரயோகம் - தேற்றப்பொருளைக் காட்டுகிற சொல்லின் ப்ரயோகம்.

*திருவாய் - ரு - கூ - கO

1 இவ்வுபாயத்தை நிர்த்தேசித்த அநந்தரம் அவதாரணப்ர யோகம் பண்ணின வசநங்களை பலவற்றையும் இதுக்கு உதாஹரணமாக அருளிச்செய்கிறார்

மூ—(உஉக) "மாமேவ யே ப்ரபத்யந்தே", "தமேவசாத்யம்", "த்வமேவோபாயபூதோமே பவ", *"ஆறெனக்கு நின்பாதமேசரணாகத்தந்தொழிந்தாய்" என்றுஞ் 2 சொல்லுகிறபடியே

(வ்யா.) 'மாமேவ' என்று தொடங்கி அதாவது - (கஅஎ) "[Grantha]" [மாமேவ யே ப்ரபத்யந்தே] என்று என்னையே யாவர் சிலர் ப்ரபத்திபண்ணுகிறார்கள் என்றும், (கஅஅ) "[Grantha]" [தமேவசாத்யம் புருஷம் ப்ரபத்யே] என்று ஆத்யனான அந்தப் புருஷனையே ப்ரபத்திபண்ணுகிறேன் என்றும், (கஅக) "[Grantha]" [த்வமேவோபாய பூதோமேபவ] என்று நீயே எனக்கு உபாயமாக வேணும் என்றும், "*ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்று எனக்கு உபாயந்தருகிற இடத்தில் உன் திருவடிகளையே உபாயமாகத் தந்தாயென்றுஞ் சொல்லுகிற இவ்விடங்களில், "மாமேவ" "தமேவ" "த்வமேவ" "நின்பாதமே" 3 என்று ஸ்வீகார்ய வஸ்து நிர்த்தேசாநந்தரம் அவதாரணத்தைச் சொல்லுகிற ப்ரகாரத்திலே யென்கை

4 'ஏதத் வ்யாவர்த்யம் ஏது?' என்ன, அருளிச்செய்கிறார்

மூ—(உஉஉ) இத்தால 'வ்ரஜ' என்கிற ஸ்வீகாரத்தில் உபாயபாவத்தைத் தவிர்க்கிறது

(வ்யா.) 'இத்தால்' என்று தொடங்கி அதாவது-உபாயாந்தரங்கள் வ்யாவர்த்யமாமளவில் 5 பௌநருக்த்யம் ப்ரஸங்கிக்கையாலும்,

1 இவ்விஷயத்தைக் ஸாத்யோபாயத்தை, நிர்த்தேசித்த அநந்தரம்-சொல்லின்றகாட்டினபிறகு 2 சொல்லுகிறபடியே என்று மூலத்திலுள்ள இந்தச் சொல், அவதாரணார்த்தத்தைக் காட்டுகிறது என்று கீழோடே அந்வயிக்கும் 3 ஸ்வீகார்யவஸ்து - உபாயமாகப் பற்றப்படுகிற பொருள் 4 ஏதத்வ்யாவர்த்யம்-அவதாரணார்த்தத்தை யுடைய இந்தஏகபதத்தால் தவிர்க்கப்படத்தகுந்தது 5 பௌநருக்த்யம்ப்ரஸங்கித்தல் - கூறியது கூறலென்ற குற்றமுண்டாதல் 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்ற இடத்திலேயே உபாயாந்தரங்கள் தவிர்க்கத்தக்கவை யென்று ஏற்பட்டு விட்டபடியால் இங்கே ஏகபதம் உபாயாந்தரங்களைத் தவிர்க்குமென்ன வொண்ணாதெனக.

*திருவாய்-ச-எ-க௦.

தேவதாந்தரங்கள் வ்யாவ்ருத்தமா ம கில 'மாம்' என்று 1 அஸாதாரணாகாரத்தைச் சொல்லுகையாலே அது கீழே ஸித்தமாகையாலும், இந்த அவதாரணத்தால் 'வ்ரஜ' என்று மேல் சொல்லுகிற 2 ஸ்வீகாரத்தில் உபாயத்வத்தைக் கழிக்கிறது என்கை. இந்த 3 ஸ்வீகாரந்தானும் அந்வய வ்யதிரேகத்தாலே ஸாதநம் என்று நினைக்கலாயிருக்கையாலே, இதன் ஸாதநத்வம் அவஶ்யம் கழிக்கவேணுமிறே.

4.* 'ஸ்வீகாராநந்தரமொழிய உபாயம் கார்யகரமாகாமையாலே பேற்றுக்கு இது அவஶ்யம் வேண்டியிருக்க, இதில் உபாயத்வத்தைக் கழிக்கிறபடிதான் எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார்

ஸூ—(௨௨௯) ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது

(வ்யா) 'ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது' என்றதாவது - ஸ்வீகாராநந்தரம் இவனுக்கு அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் பண்ணுகையாகிற இது அவனாலே ஆனாற்போலே 6. தத்பூர்வபாவியான ஸ்வீகாரந்தானும் அவனாலே உண்டானது என்கை. இத்தால், ஸ்வீகாரத்துக்கு 7 உபாயகார்யத்வமொழிய உபாயத்வம் இல்லை என்றதாயிற்று.

---

1 அஸாதாரணாகாரம் - அவனுக்கு என்று விசேஷமாக ஏற்பட்ட வடிவு விபவத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ க்ருஷ்ணன் தன்னை 'மாம்' என்று சுட்டிக்காட்டுவதால் 'மாமென்று அஸாதாரணாகாரத்தைச் சொல்லுகையாலே' என்கிறார் 2 ஸ்வீகாரத்தில் உபாயத்வத்தை - பகவானைச் சரணமாகப் பற்றுவதென்ற செய்கையே நாம் ஏறுதற்கு உபாயமாமென்பதை 3 அந்வயமாவது - ஸ்வீகாரமுண்டானால், மோக்ஷம் ஸித்திப்பது வ்யதிரேகமாவது - ஸ்வீகாரமில்லாவிட்டால் மோக்ஷம் ஸித்தியாமற்போவது ஒன்று இருப்பின் தானும் உண்டாய், அது இல்லாமற்போனால் தானும் இல்லாமற்போனால் அது அதற்குச் சாதனமென்பது, லோகஸித்தம் ஆகவே, இந்த ஸ்வீகாரம் ஸாதநமென்று தோன்றுமாதலால் அதனைக்கழிக்க வேண்டியது அவசியமாதலால் ஏகசப்தம் அதைக் கழிக்கின்றதென்க 4 ஸ்வீகாராநந்தரம் ஸ்வீகாரத்திற்குப்பிறகு 5 பேற்றுக்கு - புருஷார்த்தத்துக்கு இது-ஸ்வீகாரம் 6. தத்பூர்வபாவியான - இஷ்டப்ராப்தியையும் அநிஷ்டநிவ்ருத்தியையும் செய்வதற்கு முன்பு உண்டான 7 உபாயகார்யத்வம் - உபாயமான பகவானாலே செய்யப்பட்டதாகுகை சேதநன் பகவானை உபாயமாக ஸ்வீகரிப்பதற்குங் காரணம் ஸித்தோபாயமாகவுள்ள அந்தப்பகவானேயென்பதை மேல்வாக்கியம் விளக்கும்.

* ஸ்வீகாரமொழிய என்னும் பாடமுண்டு

'அவனாலே வருகையாவது என்?' என்ன, அருளிச்செய்கிறார்

ஸூ—(உஉச) ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்

(வ்யா) 'ஸ்ருஷ்டி' என்று தொடங்கி. அதாவது- 1 கரணகளேபர விதுரனாய போகமோக்ஷ ஶூந்யனாய் 2 அசித்விஶேஷிதனாய்க் கிடக்கிற தசையிலே கரணகளேபர 3 விஶிஷ்டனாய் ஜ்ஞாநவிகாஸ யுக்தனாம்படி ஸ்ருஷ்டித்து, * 4 "எதிர்சூழல்புக்கு" என்கிறபடியே இவனை அங்கீகரிக்கைக்காக அநேக அவதாரங்களைப் பண்ணி அவதரித்த இடங்களிலே 5 ஆஶ்ரயண ருசி விஶ்வாஸ ஜநகமான தன் குண சேஷ்டிதாதிகளை ப்ரகாஶிப்பித்த இவ்வழியாலே அவன் பண்ணின க்ருஷியாலே பலித்தது, இது என்கை

இவ்வர்த்தத்தில் ப்ரமாணம் காட்டுகிறார்

ஸூ.—(உஉரு) "அதுவும் அவனது இன்னருளே."

(வ்யா) "அதுவுமவனதின்னருளே" என்று. அதாவது-† "உணர்விலும்பரொருவனை யவனதருளாலுறற்பொருட்டு என்னுணர்வினுளே யிருத்தினேன்" என்று உணர்வுமிக்கிருக்கக்கடவரான நித்யஸூரிகளுடைய 6 ஸத்தாதிகளுக்கு நிர்வாஹகனான அத்விதீயனானவனை அவனுடைய அருளாலே ப்ராப்திக்கைக்காக என்னுடைய அபேக்ஷாரூபஜ்ஞாநத்துக்குள்ளே யிருத்தினேன் என்று தம்முடைய ஸ்வீகாரத்தை யருளிச்செய்த அநந்தரம், † "அதுவுமவனதின்னருளே" என்று அந்த ஸ்வீகாரந்தானும் அவனுடைய நிர்ஹேதுக

---

1 கரண களேபர விதுரன - (கை கால் முதலிய) உறுப்புகள் உடம்பு என்றிவற்றைப்பெறாதவன் 2 அசித் அவிஶேஷிதனாய் - அசித்தைக்காட்டிலும் வேறுபட்டுத் தோன்றாதவனாய் ஜ்ஞாநஹீநனாய் என்றபடி 3 விஶிஷ்டன - கூடினவன் 4 எதிர்சூழல்புக்கு - சேதநன் பிறக்குந்தோறும் அவனைத் திருத்திச்சேர்த்துக்கொள்வதற்காக எதிரான பல அவதாரங்களைக் கொண்டு 5. ஆஶ்ரயணருசி - பகவானை ஆஶ்ரயிப்பதில் ப்ரீதி ஆஶ்ரயண விஶ்வாஸம் - இவனை ஆஶ்ரயித்தால் இவன் நம்மைக் காப்பாற்றுவனென்ற நம்பிக்கை ஜநகம் - உண்டாக்குவது தன்குண சேஷ்டிதங்கள் - குணங்களும் செய்கைகளும் 6 ஸத்தாதிகள் - ஸத்தை முதலியவை, ஸத்தை - ஸ்திதி: ஆதிசப்தத்தால் ப்ரவ்ருத்தி முதலானவை கொள்ளப்படும்

* திருவா - உ - எ - சு.                † திருவா - அ - அ - ரு

க்ருபையினாலே உண்டானது என்று ஆழ்வார் அருளிச்செய்கையாலே, ஸ்வீகாரமும் அவனுடைய க்ருஷிபலமென்றே கொள்ளவேணும் என்கை.

இப்படியாகையால் இந்த ஸ்வீகாரத்தில் 1 சரக்கற நினைக்கக்கடவன் என்கிறார்.

**ஸூ—(உஉசா) இத்தை ஒழியவும் தானே கார்யஞ் செய்யும் என்று நினைக்கக்கடவன்.**

(வ்யா) 'இத்தையொழியவும்' என்று தொடங்கி. அதாவது- இந்த ஸ்வீகாரத்துக்கும் தானே க்ருஷிபண்ணுமவன் ஒருவன் ஆகையாலே, இதுக்காக அன்று அவன் நமக்குக் கார்யஞ்செய்கிறது, இத்தை ஒழியவும் இவ்வாத்மோஜ்ஜீவனகரனான தானே நம்முடைய இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரரூபமான கார்யத்தைச் செய்யுமென்று 2 ப்ரதிபத்தி பண்ணக்கடவன் என்கை.

'இப்படி நினைக்கவேண்டுகிறது என்?' என்ன, அருளிச்செய்கிறார்.

**ஸூ—(உஉஎ) அல்லாதபோது உபாயநைரபேக்ஷ்யம் ஜீவியாது.**

(வ்யா) 'அல்லாதபோது' என்று தொடங்கி. அதாவது- 'இத்தையொழியவும் கார்யஞ்செய்யுமென்று நினையாதே, இதுவும் வேணும் அவன் கார்யஞ்செய்கைக்கு' என்று நினைக்குமளவில், உபாயத்தினுடைய ஸஹாயாந்தரநைரபேக்ஷ்யம் 3 ஜீவிக்கப்பெறாது என்கை.

'ஆனால், இந்த ஸ்வீகாரந்தான் எது ஆவது?' என்ன, அருளிச்செய்கிறார்.

**ஸூ—(உஉஅ) இது ஸர்வமுக்திப்ரஸங்கபரிஹாரார்த்தம், சைதந்யகார்யம், ராகப்ராப்தம், ஸ்வரூபநிஷ்டம், அப்ரதிஷேதத்யோதகம்.**

(வ்யா) 'இது' என்று தொடங்கி. அதாவது-'இந்த ஸ்வீகாரம், இத்தலையில் ஒன்றுமின்றிக்கேயிருக்க ஈச்வரன் தானே உஜ்ஜீவிப்பிக்குமளவில், எல்லாரும் பின்னை முக்தராகவேண்டாவோ?' என

---

1 சரக்கற - உபாயத்வபுத்தி நீங்க  2 ப்ரதிபத்தி - எண்ணம்
3. ஜீவிக்கப்பெறாது - நிலைநிற்காது

கிற ஸாவமுகதிபாஸஙகபரிஹாரததுககு உறுபபு; இதுதான, 'செடு ஙகாலம நமமை ரக்ஷியாதவன இனறு நமமைம் ரக்ஷிக்கு மெனறு இருக கிறது நாம எனகொண்டு' 'என்று இவன தளுமபாமல புததிஸமா தாநம பிறநதிருககைககு உறுபபு, இவன தான (அசேதநமனறிககே சேதந ளுகையாலே, 'அவனே உபாயம' எனகிற அதயவஸாயம இவன சைதநயததினுடைய காயம, வைதமாக அனறிககே ; இதில ரஸ ஜஞன இவனுடைய ராகததாலே பராபதமான இது, 2 ஸவரூபாதி ரேகி யனறிசகே தசேதகாக்ஷயதவரூபமான ஸவரூபததிலே நிறகுமது; அநாதிகாலம ஸவாக்ஷணாதிகளாலே அவன பணணும ரக்ஷணததை விலககிபபோநத இவன அது தவிாநதமைககுப பாகாஙக மெனகை.

இனி, 'மாம' எனகிற பதததுககுக கீழும, இஙகும* ஈஙவரனு டைய செயலகளை அருளிசசெயகிறா

**சூ—(உஉக) கீழ தானும பிறருமான நிலையைக் குலைததான, இங்குத தானும இவனுமான நிலையைக் குலைககிறுன்**

(வயா ) 'கீழ' என்று தொடஙகி அதாவது - "ஸாவதாமாந பரித யஜய" எனற இடததில - ஸகலஉபாயஙகளையும விடச சொலலுகை யாலே, பலபரதனை 3. தானும உபாயாநதரஙகளுமாயக கூடிநிற் கிற நிலையைக குலைததான, "ஏகம" எனகிற இடததில ஸவீகாரத தில உபாயபாவததைக கழிககையாலே, உபாயபூதனை தானும்

---

1 இதில ரஸஜஞன - எமபெருமானையே ஶரணமாகபபறறுவதிலுளள ருசியை யறிநதவன 2 ஸவரூப அதிரேகி - ஸவரூபததைககாடடிலும வேறு படடது பகவானுகக் ஶேஷபபடடு அவனால ரக்ஷய [ரக்ஷிககபபடுமது] மான ஆதமா நான உனனையே ஶரணமாகப புததிபணணுகிறேன எனபது தன ஸவரூபததையே சொனனதாதல காணக 3 ஸ்ரீ கீதையில சரமஶலோ கததுககு முனபு அருளிசசெயதுளள காமம முதலிய உபாயஙகளை யெலலாம விலககி அஙகு ரக்ஷகனுககச சொனன தனனையே இஙகு உபாயமாகச சொனன தனால, காமாதிகள உபாயமாமபோது தான ரக்ஷகனுகவேணடு மெனற நிாபபநதம உளளதுபோலத தானே உபாயமாமபோது வேறொரு உபாயம வேணடிய திலலை யெனறு பெறபபடுதல காணக பகவானுகிய தான அஙகியாகநிறக, உபாயாநதரஙகள அஙகமாக இருகக, இவவாறு இரணடுமே கூடவேணடு மென பது - உபாயாநதரஙகளைப பரிககிரஹிததவாககே யெனறபடி

* 'மேலும' எனறு பிரததி பேதம

1 தன் ஸ்வீகாரத்தில் உபாயபுத்திபண்ணி நிற்கிற இவனுமான நிலையைக் குலைக்கிறானென்னகை. உபாயாந்தரங்களைப் பிறர் என்றது-*"உன்னாலல்லால் யாவராலும்" என்றாற்போலே

இனி, ஸாதநபுத்த்யா இவன் பண்ணும் ஸ்வீகாரத்தினுடைய தோஷத்தை அருளிச்செய்கிறார்

ஸூ—(உகூ0) அவனை இவன் பற்றும்பற்று அஹங்கார கர்ப்பம், அபசாரம்.

(வ்யா) 'அவனை' என்று தொடங்கி அதாவது-2 நிருபாதிகரக்ஷகனான அவனை, தத்ரக்ஷ்யபூதனான இவன், தன் ரக்ஷணத்துக்கு உறுப்பாக 3 ஸ்வீகரிக்கிற ஸ்வீகாரம், 4 ஸ்வகர்த்ருத்வரூப அஹங்கார கர்ப்பமுமாய், 5 பிதாவுக்குப் புத்ரன் எழுத்து வாங்குமாபோலே 6 அபசாரமுமாயிருக்குமென்கை

'ஆனால், ரக்ஷகமாவது தான் ஏது?' என்ன அருளிச்செய்கிறார்

ஸூ—(உகூக) அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்.

(வ்யா) 'அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்' என்று. அதாவது, இவ்வாத்மாவினுடைய ரக்ஷணத்துக்குக் 7 கடவனான அவன் 'இவனை நாம் ரக்ஷிக்கக்கடவோம்' என்று அபிமானித்துக்கொள்ளுகையாகிற ஸ்வீகாரமே இவனுக்கு, 8 ரக்ஷகமாயற்வது என்கை

---

1 தன் ஸ்வீகாரத்தில் உபாயபுத்தி பண்ணிநிற்கிற இவனான நிலை-'நாம் எம்பெருமானை உபாயமாகப் பற்றினதனாலன்றோ அவன் நம்மை ரக்ஷிக்கப்போகிறான்' என்று தான் ஈஶ்வரனை உபாயமாக ஸ்வீகரித்ததில் உபாயத்வபுத்தியைக் கொள்ளுகிற இந்தச் சேதநன் நிலைமை 2 நிருபாதிக ரக்ஷகன்-காரணமில்லாமலே (ஸ்வதஸ்ஸித்தமான ஸம்பந்தத்தாலே) ரக்ஷிப்பவன் 3 ஸ்வீகரிக்கிற ஸ்வீகாரம்-அவனே உபாயமென்று மாநஸமாகக் கொள்ளுகிற நினைவு 4 ஸ்வகர்த்ருத்வரூப அஹங்கார கர்ப்பம்-'எம்பெருமான் நம்மைப் பாதுகாக்கும்வகையில் நம்மைத் தன் திருவடிகளை உபாயமாகப் பற்றும்படி செய்ததும் ஒருவகை' என்று நினைவு கொள்ளாமல், 'நான் இந்த ப்ரபத்தியை என்னை ரக்ஷித்துக்கொள்ளச் செய்தேன்' என்று எண்ணுகிற இறுமாப்பைத் தன்னிட்டதிற் கொண்டது 5 பிதாவுக்குப் புத்ரன் எழுத்துவாங்குதல்-பிதாவினிடத்திலே 'நான் உன்னை ரக்ஷிக்கிறேன்' என்று கையெழுத்திடும்படி புத்திரன் கையெழுத்துக் கேட்டு வாங்குதல் 6 அபசாரம்-அபசாரத்தைச் செய்வது அபசாரம்-பழிப்பு 7 கடவன்-உரியவன் 8 ரக்ஷகமாயறுவது-ரக்ஷகமாகத்தீர்வது

*திருவாய் ரு,அ,க.

'சேதநப்ரவ்ருத்தியில் ஒன்றையும் இவ்வுபாயம் ஸஹியாது' என்னுமத்தைத் தெளிவிக்கைக்காக, உபாயாந்தரங்களுக்கும் இவ்வுபாயத்துக்கும் உண்டான விசேஷத்தை அநுபவிச்செய்கிறார்

சூ—(உருஉ) மற்றை உபாயங்களுக்கு நிவ்ருத்தி தோஷம், இதுக்கு ப்ரவ்ருத்தி தோஷம்

(வ்யா) 'மற்றை' என்று தொடங்கி அதாவது-ஸித்தோபாய மான இத்தை யொழிந்த உபாயங்களுக்கு 1 சேதநப்ரவ்ருத்தியாலே ஸ்வரூபஸித்தி ஆக வேண்டுகையாலே, இவனுடைய ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி தோஷமாயிருக்கும், இந்தஉபாயத்துக்கு, 2. ஸஹாயாந்தர ஸம்ஸர்க்கம் அஸஹ்ய மாகையாலே, இச்சேதநனுடைய ப்ரவ்ருத்தி என்பது ஒன்றுமே தோஷமா யிருக்கு மென்கை

'சேதநவ்யாபாரம் ஒன்றும் வேண்டா' என்னுமிடத்துக்கு ப்ரமாணங் காட்டுகிறார்

சூ—(உருரு) * "சிற்றவேண்டா"

(வ்யா.) * 'சிற்றவேண்டா' என்று அதாவது-ஸித்தோபாய ஸ்வீகாரரு சொல்லுகிற * "மற்றொன்றில்லை" என்கிற பாட்டிலே, * 'சிற்ற வேண்டா' என்று - 'சிற்றுதல் - சித்றுதலாய், பாக்க ஒரு வ்யாபாரம் பண்ணவேண்டா' என்கையாலே, இவ்வுபாயத்தில் இழியுமவனுக்கு ஒரு வ்யாபாரம் பண்ணவேண்டா என்னு மிடரு சொல்லிற்றிறே யென்கை

இதுதான் இஶ்ஶ்லோகந்தன்னுள்ளே சொல்லிற்றென்கிறார்

சூ—(உருச) நிவ்ருத்தி, கீழே சொல்லிற்று.

(வ்யா) 'நிவ்ருத்தி கீழே சொல்லிற்று' என்று அதாவது- 'ஸர்வதர்மாந்பரித்யஜ்ய' என்று - ஸகல ப்ரவ்ருத்தியினுடையவும் நிவ்ருத்தியே இவனுக்கு வேண்டுவது என்னுமிடம், கீழே சொல்லிற்று என்கை.

'ஆனால், உபகாரஸ்ம்ருதிதான் வேணுமோ? அது 3 உபாயத்தில் முதலிடாதோ?' என்ன அருளிச்செய்கிறார்

1 சேதநப்ரவ்ருத்தி - சேதநனுடைய முயற்சி. 2 ஸஹாயாந்தர ஸம்ஸர்க்கம் - வேறு ஒரு துணையின் சம்பந்தம் 3 உபாயத்தில் முதலிடுதல் - தானே உபாய மென வழங்குமாறு சேர்தல்

* திருவாய். ௯-௧-௭.

**ஸூ—(உ௱ரு) உபகாரஸ்ம்ருதியும் சைதந்யத்தாலே வந்தது, உபாயத்தில் அந்தர்ப்பவியாது**

(வ்யா) 'உபகாரஸ்ம்ருதியும்' என்று தொடங்கி அதாவது - "என்னைத் [1] தீமனங்கெடுத்தாய்" † [2] "மருவித் தொழும் மனமே தந்தாய்" * இத்யாதியாலே இவ்வுபாயவிஷயத்தில் இவன் பண்ணும் உபகாரஸ்ம்ருதியும், இவனுடைய சைதந்யப்ரயுக்தமாய் வந்ததித்தனை, இது உண்டாகையாலே ஸர்வேஸ்வரன் கார்யம் செய்தது [3] என்று உபாயத்தில் உட்புகாது என்கை.

ஆக. [4] சதுர்த்தபதார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

இனி, பஞ்சமபதத்தை உபாதானம் பண்ணுகிறார்.

**ஸூ—(உ௱௬) ஸரணம் = உபாயமாக**

(வ்யா) 'ஸரணம்' என்று அதுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார், 'உபாயமாக' என்று.

அர்த்தாந்தரங்களையும் [5] காட்டவற்றாயிருக்க, இவ்விடத்தில் இது, உபாயத்தையே காட்டுகிறமையை ஸம்ஹேதுகமாக அருளிச்செய்கிறார்.

**ஸூ—(உ௱எ) இந்த ஸரணஸப்தம்-ரக்ஷிதாவையும் க்ருஹத்தையும் உபாயத்தையும் காட்டக்கடவதேயாகிலும் இவ்விடத்தில் உபாயத்தையே காட்டுகிறது, கிழோடே சேரவேண்டுகையாலே**

(வ்யா) 'இந்தஸரணஸப்தம்' என்று தொடங்கி அதாவது - (கக௦) 'உபாயே க்ருஹரக்ஷித்ரோ: ஸப்தஸ்ஸரணமித்யயம் - வர்த்ததே' [உபாயே க்ருஹரக்ஷித்ரோஸ் ஸப்தஸ்ஸரணமித்யயம்-வர்த்ததே] என்கிறபடியே ஸரணஸப்தமான இது-ரக்ஷிதாவையும் க்ருஹத்தையும் உபாயத்தையும் காட்டக்கடவதேயாகிலும், (ககக) "ஸாத்யத்வேந ஷ உபாயாநத்யேஷ்கவாசக:" [ஸாமப்ரதமனிசஷ உபாயாநதைகவாசக:] என்கிறபடியே இந்த ஸ்தலத்திலே உபாயத்தையே காட்டுகிறது.

---

1 தீமனம் - துஷ்டமனம். 2 மருவித்தொழுதல் - எப்பொழுதுமாகக் கிட்டி நின்று அடிமைசெய்தல். 3. 'என்று' என்பதன்பின்னே நினைக்குமாறு என்று வருவித்துக்கொள்க. 4 சதுர்த்தபதம் - நான்காவது பதம். 5 காட்டவற்று - காட்ட வல்லமையுள்ளது.

* திருவாய். உ, எ, அ.    † திருவாய். உ, எ, எ.

ஸாவதாமஙகளையும விடடுத தனனையேபறறசசொலலுகிற பரகரண மாகையால, 1 கீழோடே சேரவேணடுகையாலே யெனகை

2 'ஆனால, கீழசசொனன ஸாதநாநதரபரிதயாகநதானே ஸவீ கார்ய வஸதுவின உபாயதவததைத தோறறுவிக்குமதா யிருகக, ஶரணஶபதபரயோகநதான வேணுமோ?' எனனில, - வேணும. 3 பராபகஸமயததிறபோலே பராபயஸமயததிலும 4 நதீநிஸதரணநத ரததில 5 பலவபரிதயாகமபோலே ஸாதநாநதர பரிதயாகம ஸமாந மா கையாலே, 6 ததவிசிஷடமேயாகிலும ஸவீகாரமாதரம வயவசசேதக மாகமாடடாமையாலே

---

1 காமாதி உபாயஙகளை யெலலாங கேடடு அவை சுலபமாகசசெயயக கூடியனவலலவெனறும ஸவரூபவிருததமெனறும நினைதது 'நாம கரையேறும உபாயம எனனோ?' எனறு கவலைகொணடுளள அரஜுநனைககுறிதது இநதச சரமஶலோகம அருளிசசெயயபபடுவதால, அதறகு ஏறப கருஹும ரகஷகன எனற பொருளை விடடு உபாய மெனற பொருளைக கொணடாலதான காமாதிகளை உபாயமாககக கொளளுதலை விடடிடவேணு மெனறிருககிற அநத அரஜுநனுககுச சமாதானஞசொலலுகிறதெனறு கீழோடு ஒடடிவரு மெனறபடி.

2 ஶரணஶபதததுககு பரகரணபலததாலே உபாயமெனற பொருளைக கொணடுவரவேணடிவ தானால, ஶரணஶபத மிலலாமலே 'ஸாவதாமாந பரிதயஜய - மாமேகம - வரஜ' எனற இமமாததிரமே சொனனாலும, பரகரணததாலே 'வரஜ' எனபதறகு - (உபாயமாகப) பறறிபபணணு எனறு ஆததம கொணடு விடலாமே? இநத ஶரணஶபதம எதுககு? எனறு ஆகேஷபம அதறகு ஸமாதாநம —எமபெருமானை பராபயமாக [உபேயமாகப] பறறுமபோதும, நதியைக கடநதவனுககு ஓடடததின தேவையிலலாததுபோல ஸாதநாநதரஙகள ஒனறும வேணடியதிலலை யாகையால, 'ஸாவதாமாந பரிதயஜய மாம ஏகம வரஜ' எனபதறகு • எலலாசசாதனஙகளையும விடடு உபேயமாக எமபெருமானொருவனையே பறறு எனறு பொருளகொளளவும இடமுணடாகையால, 'ஶரணம வரஜ' எனனுமல "வரஜ' எனறுமாததிரம விதிககும ஸவீகாரம - அபபடி உபேயமாகப பறறுதலைத தவிரககாது ஆகவே, ஸாவதாமஙகளையுமவிடடு உபேயமாக ஸவீகரிததலைத தவிரபபதறகாக 'ஶரணம' எனபது அவஶயம வேணடுமெனறபடி 3 பராபகஸமயம - எமபெருமானை உபாயமாகப பறறுகிற ஸமயம 4 நதீநிஸதரணம-நதியைககடததல 5 பலவபரிதயாகம - ஓடடததை விடடிடுதல 6. ததவிசிஷடமேயாகிலும - ஸாதநாநதர பரிதயாகததோடு கூடியதேயானாலும ஸவீகாரமாதரம - ஶரணஶபதமிலலாமல வரஜ என்பதனால சொலலபபடும ஸவீகாரம வயவசசேதகமாகமாடடாது - உபேயமாகப பறறுதலை விலககமாடடாது

'அங்கனன்றோ சொல்லலாமோ?' 1 இந்த உபாயாந்தரத்யாகம் ஸ்வீகாரத்துக்கு அங்கமாக விதிக்கப்படுகின்றதாகையாலே, ஸ்வீகாரத்தினுடைய உபாயத்வத்தைக் காட்டவற்றாகையால், ஶரணஶப்தப்ரயோகத்துக்கு ப்ரயோஜநம் இல்லையே?' என்னில்,-அப்படிச் சொல்லவொண்ணாது, 2 ஆர்த்தமாகவருமதிற் காட்டில் ஶாப்தமாகச் சொல்லுமது யுக்தம் ஆகையாலே, (கக௨) "ஶுச்யைர்வ ஶாஸ்த்ரோக்ததயா நியோகஸ்ய ஸ்ம்ருதே: ..." [ஆக்ஷேபத: ப்ராப்தார்த்த ஆபிதாநிகஸ்யைவகர்ஹயத்வாத்] என்றிறே பாஷ்யகாரரும் அருளிச்செய்தது.

ஆக, உபாயவாசியான இந்த ஶரணஶப்தத்தாலே இவ்வஸ்துவுக்கு ப்ராப்யத்வஸ்வீகாரத்வமும் ப்ராபகத்வஸ்வீகாரத்வமும் உண்டாகையாலே, அதில் ப்ராப்யதா ஸ்வீகாரத்தை 3 வ்யவச்சேதித்ததாயிற்று.

இனி, ஷஷ்டபதத்தை உபாதாநம்பண்ணுகிறார்.

ஸூ—(உ௩அ) வ்ரஜ=புத்திபண்ணு

(வ்யா) 'வ்ரஜ' என்று. அதுக்கு ஆர்த்தம் அருளிச்செய்கிறார் 'புத்திபண்ணு' என்று.

அது தன்னை விஶதீகரிக்கிறார்

ஸூ—(உ௩௯) கத்யர்த்தமாவது புத்த்யர்த்தமாய், அத்யவஸி யென்றபடி

(வ்யா.) 'கத்யர்த்தமாவது' என்று தொடங்கி அதாவது-* 'வ்ரஜ கதௌ' என்கிற தாதுவிலே கத்யர்த்தமாய், 4 [கத்யர்த்தா: புத்த்யர்த்தா:] என்கிற ந்யாயத்தாலே, கத்யர்த்தமாவது - புத்த்யர்த்தமாய், அத்யவஸி யென்றபடி யென்கை "இந்தப் புத்தியாகிறது - 5 த்யா

1 யத்யத் ஸாங்கம் தத் தத் ஸாதநம் - [எது எது அங்கத்தோடு கூடியதோ, அது அது உபாயம்] என்ற நியாயத்துக்கு ஏற்ப 'வ்ரஜ' என்ற விதிக்கு அங்கமாக 'ஸர்வதர்மாந்பரித்யஜ்ய' என்று உபாயாந்தரத்யாகத்தைச் சொல்லியிருத்தலால், இந்த 'வ்ரஜ' என்பதனால் விதிக்கப்படுகிற ஸ்வீகாரம் உபாயமாகஸ்வீகரித்ததில்லையே காட்டக்கூடியதாகையால், இந்த ஶரணஶப்தம் வேண்டியதில்லையென்று மறுபடியும் ஆக்ஷேபம் 2 ஆர்த்தம் - கவருமது - அர்த்தபலத்தாலே சொல்லப்படுவது 3 வ்யவச்சேதித்தது - தவிர்த்தது 4 கத்யர்த்தா: - போதலென்ற பொருளுள்ள வினைச்சொற்கள், புத்த்யர்த்தா: - அறிதலென்ற பொருளிலும் வர்த்தக்கவை இது, வையாகரணர்களின் நியாயம் 5 த்யாஜ்யகோடியில் உத்தீர்ணமாய் - விடத்தக்கவை யென்று ஏற்பட்ட உபாயாந்தரங்களிற் சேராததாய் உத்தீர்ணம் - கடந்தது

*யாத-ம: ஹாதி:

